பிஸ்மில்லாஹி

உம்யுத்தூருபு அலாவஜ்ஹில் கஷ்புல் ஹிகாபு

என்னும்

# அரபிறத்தின் தர்ஜமா

இஃது
ஸெய்யிதுனா அபூபக்கர் ஸித்தீகு (றலி)
அவர்களின் மரபிலுதித்த அல்ஆரிபு பில்லாஹ்
அஷ்ஷெய்கு ரூஹிய்யித்தீன் (றஹ்) அவர்களின்
ஞான்காவலு போராகிய ஜனுப் மவ்லானு மவ்லவீ
முகம்மது அப்துல் கனிய்யி ஆலிம்சாஹிபிப்னு ஹஸனஷெய்கு
ரூஹிய்யித்தீன் அஸ்ம்சாகிபுல் காதிரிய்யில் கூதாரிய்யி அவர்க
ளால் அனேக கிதாபுகளின் ஆதாரத்தைக்கொண்டு அரபியில்
எழுதப்பட்டதை நூறு உலமாக்களால் கையொப்பமிடப்பட்டு
வெளிவந்ததை

[illegible]க்குடி
ஹாஜி, கதீபு அப்துல்காதிற் லெப்பைஹ்
அவர்களின் குமாரர்
ஜனுப், மவ்லானு மவ்லவீ,
ஹாஜி. அப்துல்லா ஆலிம் ஸாகிபவர்களால்
.. மொழி பெயர்க்கப்பட்டு
ராணிப்பேட்டை ஜனுபு முதவல்லி
வா. பி. மூஹம்மது இப்ருஹீம் சாஹிபு
அவர்களின் பொருளுதவியால்

மன்னார்குடி
[illegible]சுமி விலாஸ பிரஸில்,
[illegible]பிக்கப்பட்டது.
1922

# முகவுரை.

அல்ஹம் துலில்லாஹி றப்பில்ஆலமீன் வஸ்ஸலாத்துவஸ்ஸலாமு அலாரஸூலிஹி ஸெய்யிதினா முகம்மதின் வஆலிஹி வஸஹ்பிஹி அஜ்மஈன்.

கொஞ்சகாலத்திற்கு முன் மதுரூஸ் தமீம்ஆலிம் சாஹிபவர்களால் கஷ்புன்னிகாவென்ற அரபிபுத்தகம் வெளிப்பட்டது அதுசரியல்லவென்று சிலர்கள் சொல்லிக்கேட்டதும் அவர்கள் அப்புத்தகம் சரிஎன்று பிடிவாதம்மேலிட்டதினால் சிற்சிலஅசம்பாவித துண்டுப்பிரசுரங்களெல்லாம் வெளிப்படுத்தி ஜெயித்துவிட்டோமென்று மதப்பால் குடித்து தாங்களாகவே மகிழ்ந்து வந்தது யாவரும் நன்கறிந்த விஷயம்

அந்த புத்தகம் எவ்விதத்திலும் அறவே சரியல்லவென்று ஆராய்ச்சியின்பேரில் துணிந்து பெரிய மகான்களான இமாம்களுடைய கிதாபுகளின் ஆதாரங்களைக்கொண்டு குர்ஆன் ஆயத்துகளை பொதிந்ததாக பற்பலஊர்களிலுள்ள சுமார் 100 உலமாக்களின் கையொப்பமிட்டு வெளிவந்த றம்யுத்தூரா வென்ற அரபிரத்து அரிய கிரந்தத்திற்கு ஷரீத்துரை எழுதிய அப்துல்லா ஆலிம்சாகிபவர்களுக்கு உண்மையை அறியவேண்டிய நாம்யாவரும் நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளோம் அந்த றம்யுத்துரூபு வென்னூல் பல ஊசாட்டங்களை நீக்கி நிதான அறிவைக் கொண்டுபார்ப்போரின்மனதில் ஞானத்தை ஊட்டக்கூடிய தேவாமிர்தமாயும் சிலரைப்பிடித் தாட்டுகின்றபிடிவாத நோய்க்குத்தகுந்த சஞ்சீவியாகவும் இருக்கிறதென்பதில் ஐயமில்லை.

றம்யுத்துரூபைபற்றி நான்மென்மேலும் எழுதுவதென்றால் அழகுக்கழகு செய்வதுபோலவும் மிகைபடகூறுவதுபோலவும் ஆகுமாதலால் இவ்வியாசத்தை பெரிதும் சுருக்குகிறேன்.

நமது அருமையான வாழ்நாளை வீண்வியர்த்த மாக்காது உண்மையை கடைப்பிடித்தொழுக சர்வ வல்லபதயாபர நிதியாகிய ஹக்குசுபுஹானஹு வதஆலா அருள்புரிவானாக ஆமீன்.

இங்ஙனம்,

**D. காதிர் முஹிய்யித்தீன்**

கூத்தாநல்லூர்.

# அட்டவணை.

பக்கம். விஷயம்.

க்காமல் மறைப்பது வாஜிபாயிருக்குமென்பது.
அவ்லியாக்களிடத்தில் அற்புதம் காட்டத்தேடுவது ஆகாதென்பது.
12 அற்புதம்காட்டத்தேடுவதற்கு அத்தாட்சி கொண்டு வாராதமோஷடி.
அவ்விதம் வெளியாகாவிடில் காபிரென்று எழுதியதற்கு ஸநது கொண்டு வாராத மோஷடி
அற்புதம்காட்டத்தேடுவதுஷர்அய்இன்காறு செய்ததாகுமென்பது.
ஷற்இன் ஹுக்முகளிலொன்றை இன்காரும் பரிகாசமும் செய்வதுகுப்ருயிருக்குமென்பது.
13 ஷற்இன் ஹுக்மு ஐந்தா இருக்குமென்பது.
கைபை அறிவேனென்பதற்கு குப்றென்று பத்வாகொடுக்கக்கூடாதென்பது.
இது விஷயத்தில் இப்னுஹஜற்(றஹ) கொடுத்த பத்வாவின்நக்லு.
14 ரூஹானது வெளிரங்கமானதைப் பார்ப்பது போல் கைபையுமறியுமென்பது.
நபிமார்கள், ஸித்தீகீன்கள், ஆரிபீன்கள், தவஹீதை யுடையவர்களும் கைபை அறிவார்களென்பது.
பறுஸத்தெனும் மனத்தெழிவைக்கொண்டும் கைபை அறிவது.
கல்புடையவர் மலக்குகளையும் நபிமார்களுடைய ரூஹுகளையும் முளிப்பிலேயே பார்ப்பார்களென்பது.
15 கைபை அறிவதில் ஆண்டவனுக்கும் அடியார்களுக்கு மிடையில் வித்தியாசமிருக்கிறதென்பது.
ஆனதால் குற்ஆனின் னஸ்ஸுக்குமுறணாகாதென்பது.
16 மூன்ருவது ஸுவாலின் ஜவாபு அனேக காரணத்தைக்கொண்டு பாத்திலாக இருக்குமென்பது.
துன்யா உலமாக்களின் குறைகளைக்கூறுவது குப்றல்லவென்பது.
17 துன்யா உலமார்களின்குறைகளைப்பற்றி இஹ்யாவில் வருகிறநக்லு
18 துன்யாவை வெறுக்காதவன் ஷெய்த்தானைச்சேர்ந்தவனென்பது.
உமர்கத்தாபு (றல) அவர்களின் ஹதீஸ்.
ஸஹ்லு (றலி) அவர்களின் அர்ப்புதஹதீஸ்,
எஹ்யப்னும ஆது (றலி) அவர்களின் துன்யாஉடைய உலமாக்களைப்பற்றிச் சொல்லிய சிலஉணர்ச்சிகள்,
19 ஏழுவிதமான உலமாக்கள் எழுநரகத்திலிருப்பார்களென்பது,
20 நான்காவது சுவாலின்ஜவாபுமூன்று காரணங்களைக்கொண்டுபாத்திலா இருக்குமென்பது.
உலமாக்களிலுள்ள கெடுதிகளைக் கவனித்து தூசணிப்பதுகுப்றல்லவென்பது.
21 வாசகத்தால் குற்ஆன் (30) ஜுஸ்வுதானென்பது.
22 இதாஸுல்ஸிலத்து வல்ஆதி யாத்தி என்ற ஒவ்வொரு ஸூறத்தும் 15 ஜுஸ்வுக்கு சமமா இருக்குமென்பது,
குல்யா அய்யுஹல் காபிறூன் கால் குர்ஆனுக்கு சமமாயிருக்குமென்பது.
குல்ஹுவல்லாஹ் 10 ஜுஸ்வுக்குசமமாயிருக்குமென்பது.
குற்ஆனில் மஃரிபா மூன்றுவகை என்பது.
புற்கான் இரண்டு வகை என்பது.

23 குர்ஆனின் வாசகங்களைச் சுருக்கி இருக்கிறதாக ஆண்டவன் அருளியது,
அலி (றலி) அவர்களைத்தொட்டும் அர்ப்புதமானரிவாயத்து,
24 குர்ஆனும் அதின்கருத்துக்களும் கடலும் அலையும்போலஇருக்குமென்பது,
குர் ஆனின் கருத்துக்களுக்கு மட்டில்லை என்பது,
குர்ஆனின் ஆயத்துக்களுக்கு லாஹிர்பாத்தின் இரண்டு விதமானவுண்டென்பது.
வஸ்வாஸைவிட்டுக் கல்புதுப்பரவான வர்களுக்கு அது வெளியாகுமென்பது.
25 குற்ஆனின் கருத்துக்களை எவ்வளவு விரித்தாலும் அதிகப்படுத்தியதாகாதென்பது,
குர்ஆனில் அதிகப்படுத்தினுரென்று சொல்ல அறவே இடம்பாடில்லை என்பதற்கு காரணம்,
26 ஐந்தாவது ஸுவாலுடைய ஜவாபு பாத்திலாகி விட்டதென்பது.
குலசேகரப்பட்டணத்தாரின்பேரில்குப்ரைபயப்படப்படுமென்பது.
ஐந்துஸுவால்களும் இட்டுக்கட்டப் பட்டதென்பது.
,, சுவால்கள் வாஸ்தவமென்று வைத்துக்கொண்டாலும் அதர்க்கு ஜவாபுசரியல்ல என்பது.
,, சடிதத்திலவ்விதம் இல்லாதபட்சம் இந்தறத்தெழுத தேவை இல்லை என்பது.
27 மூஸ்லிமைக் காரணமின்றி காபிறென்று மொழிந்ததனல் தமீம் சாகிபு முற்தத்து, முலஹிது, விந்தீகு, காபிருகிவிட்டா ரென்பது.
இல்மாகிறது ஆண்டவனின் னூருகவிருக்குமென்பது,
ஷரீஅத்துடைய இல்மு மனிதரிடத்தில் படிப்பதன்றி ஆண்டவனுல் கிடைக்குமென்பது.
அனேகம் குத்புமார்களுக்கு இவ்விதமே கிடைத்திருக்கிறதென்பது
28 படிப்பில்லாத்தவனை ஒலியாக்கனுடிஞல் ஆண்டவன் படித்துக் கொடுக்கிறானென்பது,
கஷ்பைக்கொண்டு ஷரஹூடைய இல்மை அறியக்கூடுமென்பது.
மார்க்கவிஷயங்களை அறிவது, அரபீ, பார்ஸீ, ஹிந்தீ. இந்த மூன்றைக்கொண்டும் சொந்தமில்லை என்பது,
இல்மைக்கொண்டு முக்கியகருத்தாவது அறியவேண்டியவைகளை அறிந்து அமல்செய்வதென்பது,
29 அறிந்தபடி அமல்செய்யாதவர்கள் ஷெய்தான் கையிலகப்படுவார்களென்பது.
இதர்க்கு பொருள், மதிப்பு மரியாதைகளின் பேரில்ஆசை இருப்பதும் தன்னையுயர்த்தி பிறரைத்தாழ்த்தி தன்னைமறந்து பெறர்ஐபைஎடுத்து புறம்பேசுவதும் அடையாளமாஇருக்குமென்பது.
தஜ்ஜாலைவிட துனயாவுடைய உலமாக்களால் வழிகேடு பரவுமென்பது.
30 சொல்லைவிட செயலின் உபதேசம் அதிகப்பலனுடையதென்பது.
கஷ்புள்ளி காபைச்சரிஎன்று திண்ணமயங்கொள்வது ஆகாதென்பது.

அட்டவணை முற்றிற்று.



# றம்யுத் துரூபு

அலாவஜ்ஹி

# கஷ்புன்னிகாபு

என்னும்

# அரபிறத்தின் தர்ஜமா

பிஸ்மில்லாஹிற்றஹ்மானிற்றஹீம்

எல்லா புகழும் புகழ்ச்சியும் எல்லா படைப்புகளையும் படை திரணமை கொடுத்து வளர்த்து அதற்குடையவனாக யிருக்கும் டியான அல்லாஹுத்த ஆலாவுக்காயிருக்கும், தாதிய்யா ஸிபா திய்யா அஸ்மாயிய்யா வென்னும் மூன்று விதமான தஜல்லியாத்துகளென்னும் றஹ்மத்துகளையும் இலாஹிய்யான தஜல்லி என்னும் ஸலாமையும் நமக்கெல்லாம் நாயகமாகிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் மீதும் .அவர்களின் கிளையார் தோழரனைவர்கள் பேரிலும் சொரிவானாக.

## ஹம்து ஸலவாத்துக்குப்பின்

மேயானாகிய அல்லாஹு தஆலாவின் சொந்த றஹ்மதை ஆதரவு வைத்த அவனின் அடியான் முகம்மது அப்துல் கனிய்யி (ஆண்டவன் மறைவாகிய் தன்னுடைய வுள்கிறுபையைக்கொண்டு கார்த்தருள் புரிவானாக) என்பவன் எழுதுவதென்னவென்றால் மதாரஸிலிருக்கிற குலசேகரப்பட்டணம் முஹம்மது தமீம் ஆலிம் சாஹிபால் வெளியிடப்பட்ட கஷ்புன்னிகா பாகிறது முகம்மதிய்யா வானமார்க்கத்துக்கு விரோதமாகவும் முஸ்தபா நாயகம் அவர்களின் கொள்கைக்கு மாறுதலடைந்ததாகவும் இருந்ததால் அதை தமிழில் தர்ஜூமாச்செய்து வெளிப்படுத்தினதை

சிலபாமர ஜனங்கள் நம்பி வழிகெட்டு போய் விடுவார்களென்பதை உத்தேசித்து அதில் நின்றும் குப்ரென்றெழுதிய ஜவாபுகளைமட்டும் தமிழில் துவற்கமாக றத்துச்செய்திருந்தேன் இப்போது சில சகோதரர்கள் அதை அரபி வாக்கியங்களாலும் மார்க்க நெறிகளை சரியாக அறியாதவர்களைத் தவிர மற்றவர்கள் யாரும் இன்னூர் செய்யமாட்டார்களே அப்பேர்பட்ட பாரவான்களாகிய மகான்களான இமாம்களின் முஃதபரான கிதாபுகளின் ஆதாரங்களாலும் தெளிவாகவும் விரிவாகவும் றத்து எழுதி தரவேணுமென்று என்னிடம் கேட்டுக்கொண்ட படியால் மிகவுமறிந்த ஆண்டவனின் உதவியை தேடினவனாகவும் அதை பூர்த்தி செய்வதற்கு அவன் பேரிலேயே முழுநம்பிக்கை வைத்தவனாகவும் இதை எழுதலானேன் இதாகிறது அல்லாகுத்தஆலாவின் புகழைக்கொண்டு தீனுல இஸ்லாமென்னும் மார்க்கத்திற்கு தூணாகவும் மார்க்க துஷ்டர்களான வம்பர்களின் முதுகுகளை ஒடித்து ஹக்குக்கு தலைசாய்க்கும்படி செய்துள்ள கிதாபாகவும் வெளி வந்து விட்டது.

ஆண்டவன் தமீம் சாகிபுக்கும் அவரை பித்றவைவுண்டாக்கும்படி தூண்டிய அவரின் தோழருக்கும் நேர்வழி காட்டுவானாக

கஷ்புன்னிகாபிலுள்ள வாசகத்திற்கு தர்ஜமாவும்
அதற்கு றத்தான றய்யுத்துருபின் வாசகத்திற்கு தர்ஜமாவும்

(கஷ்புன்னிகாபு) விஷயம்வினாவில் எழுதப்பட்டது போலிருந்தால் வினாவில் சொல்லபட்டவர் முற்தத்து, முல்ஹித்து, ஸிந்தீகு, காபிராகவிருக்கும்.

(றய்யுத்துருபு) விஷயம் வினாவில் சொல்லப்பட்டது போலிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒருபோதும் அப்படி ஆக மாட்டார் வினாக்கள்யாவும் குப்ருக்குரியதல்லவென்பதின் விபரங்கள் பின்னால் வருகின்றன,

(கஷ்பு) இன்னஹா றப்புல் ஆலமீன் என்று அவர் தன்கடிதத்தில் எழுதி இருக்கிறார் இவ்விதம் எழுதுவது ஸரீஹான குப்ராயிருக்கும்.

(றம்யு) இவ்விதம் கடிதத்தில் எழுதி இருப்பதாகவினைகேட்டவன் தன் ஸுவாலில் எழுதவில்லை இது இவரின் பொய்க்கட்டுகளில் முந்தினதாக இருக்கும் இதன் விபரம் பின்னால் வருகிறது (மேலும் கடிதத்தைக்கொண்டு குப்ர் விஷயமாகாதென்றும், கடிதத்தில் எழுதுவதுரித்தத்தின் காரணங்களில் நின்று முள்ளதல்லவென்றும், நிண்ணயம் கொள்வதைக்கொண்டும், அதைச்சொல்வது கொண்டும், செய்வது கொண்டும் தான் குப்ரு விஷயமாகுமென்று மட்டுப்படுத்தி மஹல்லி துஹ்பா, இஆனு, றத்துல் முஹ்தார் முதலிய கிதாபுகளில் வருகிறதாகவும் அன்யாவுடைய கொடுக்கல்வாங்கல் விஷயங்களில் (தல்லால்) தாகன் (சற்ருபு) வியாபாரி முதலியவர்களின் கணக்கு புத்தகம் ரசீது முதலியவைகளைத்தவிர மற்ற விஷயங்களில் கடிதத்தைப்பற்றி அவனிடத்தில் கேள்க்காமல் எவ்விதமான ஹுக்மும் செய்யக்கூடாதென்று பதாவாமஹ்திய்யா, அஷ்பாஹ், றத்துல் முஹ்தார், முதலிய கிதாபுகளில் வருகிறதாகவும் துன்யா விஷயத்திலேயே இவ்விதம் கடிதத்தை நம்பி எந்த விஷயமும் செய்யக்கூடாதென்று வந்திருக்க தீன் விஷயங்களில் அதிலும் குப்றின் விஷயங்களில் கேள்க்காமல் அறவே ஹுக்மு செய்யக்கூடாதென்றும் கடிதமாகிறது ரித்தத்து உடையகாரணங்களிலுள்ளதல்லவென்றும் எந்தவிதத்திலும் கடிதத்தைக்கொண்டு குப்ரு விஷயமானதாக பத்வா எழுதினது பாதிலாகவும் மற்றூதாகவுமிருக்குமென்று மேல்கூறிய கிதாபுகளின் ஆதாரங்களைககாட்டி இஜாலத்துல் ஹிஜாபென்ற அரபிறத்தில் எழுதிஇருப்பதால் இதில் அதை விபரிக்கவில்லை இதின் முழுவிபரத்தையும் அதில் பார்த்துக்கொள்ளவும்.)

எவ்விதத்திலும் முஸ்லிமானவனை காபிராக்கும் விஷயம் மிகவும் அபாயகரமானதென்றும் ஒருவருடைய மனதிலுள்ளதை அறிந்து கொள்வது கஷ்டமானதென்றும் மனதிலுள்ளதுகளுக்கு மாற்றமாய் எழுதக்கூடுமென்றும் ஒருவனுடைய எழுத்தைப்போல் வேறொருவன் எழுதகூடுமென்றும் ஒருவருடைய மனதிலுள்ளதைப்பற்றி மற்றொருவர் சாட்சி சொல்வது முடியாதகாரியமென்றும் அவரின் கருத்திலுள்ளவைகளை நன்றாய்

கேட்டு நோட்டமிட்டு எக்காரியமும் செய்யவேண்டியது உலமாக்களின் ஹக்காக இருக்குமென்றும் "யவாகித்" தென்றகிதாபில் வந்திருப்பதாலும் சுவாலில் சொல்லப்பட்டதுயாவும குப்ரை வருத்தாத வாசகங்களாக இருப்பதாலும் சுவாலில் எழுதியது போல் கடிதத்தில் எழுதி இருந்தாலும் வாய்சல் மொழிந்திருந்தாலும் அதைக்கொண்டு குபுரென்று ஹுகும் செய்ய முன் வந்ததே ஆகாத கருமமாயிருக்கும் இதின் விபரம் இன்ஷா அல்லா பின்னுல் தெளியாய்தெரியவரும்.

சுவால் கேட்டவன் சுவாலில் (வஇன்குந்து அனறப்பல் ஆலமீன் இல்லா அன்னீ இப்னுன் லில்அபிவகல்புன், லில்மலிகி) என்று கேட்டிருக்க குலசேகரப்பட்டணத்தைச் சேர்ந்த நம்முடைய முஹிப்பு தமீம் ஆலிம் சாகிபு அதை விட்டுவிட்டு தன் புறத்தில் நின்றும் (இன்னஹுறப்புல் ஆலமீன்) என்று மட்டும் புதிய சுவாலாக இட்டுக்கட்டி இவ்விதம் கடிதத்தில் எழுதி இருப்பதாக தன்னுடை பத்வாவின் துவக்கத்தில் பொய்யைக்கொண்டே ஆரம்பம்செய்திருக்கிருர் இதைக்கொண்டும் இனிநான் அவரின் அனேகபொய்களை பின்னுல் எழுதுவதைக் கொண்டும் அவரின் உள்ளக்கருத்தைக்கண்டு கொள்வீர்கள்.

(திருகுர்ஆன்) அல்லாஹுத்தஆலாவுடைய
ஆயாத்) திருஷ்டாந்தன்களைக்கொண்டு ஈமான் கொள்ளாதவர்கள்தான்பொய்யை இட்டுககட்டுவார்கள் அவர்களேபொய்யர்ளாகவிருக்கும்.

இவ்விதம் சரீஹானகுப்ரென்றெழுதிய தீர்மானம் நான்கு காரணங்களைக்கொண்டு றத்து செய்யப்பட்டது.

(1)வது இந்த ஹுக்மு அவரில் நின்றும் இட்டுக்கட்டப்பட்ட புதியஸுவாலுக்கு ஜவாபாயிருக்குமே யொழிய வினவில் கேட்ட சுவாலுக்கு ஜவாபல்லவென்பது ஸ்பஷ்டமானதாக இருக்கும் இதின்விபரம் பின்னுல்வருகின்றது (2)வது அவருக்கு அரபி தெரியாதென்று வினவில் எழுதியிருப்பதால் அவரில் நின்றும் இவ்விதமான அரபிவாசகம் வெளியாகுவது அசாத்தியமான விஷயமானதால் வினவில்கேட்ட சுவாலும் இட்டுக்கட்டப்

பட்ட தென்பதில் ஐயமில்லை வினாகேட்டவன் சுவாலை இட்டுக் கட்டியதுபோல் குலசேகரபட்டணத்து தமீம் ஆலிம்சாதன் புறத்தில் இட்டுக்கட்டி இருக்கிறார் இதுவுமன்றி அந்தசுவாலில் அந்தவாசகததுக்குப்பின் (இல்லா அன்னீ இப்னுன்) என்றவை போல்கொத்தவாசகங்கள் சுவாலில் சிலதாயிருந்தும் அதைக் குறித்து ஒன்றும்பேசவில்லை அதற்குயாதொரு முகாந்தரமும் சொல்லாமல் மெள்ள நழுக விட்டுவிட்டார்.

முப்தியென்று முன்வந்தவர் வினாவில் கேட்டவைகளையெல்லாம் நன்றாய்க்கவனித்து ஒன்றையும் விடாமல் ஜவாபுசொல்ல வேண்டியகடமைஇருக்க ஒரேசுவாலில் சிலதை விட்டும் சிலதை பிரட்டியும் ஹ—கும் செய்தது மகாபெரிய சதிமரன மென்பது யாவரும் நன்கறிந்த விஷயம்.

(திருகுர் ஆன்) சதிமானம் செய்பவர்களுக்கு ஆண்டவன் நேர்வழி காட்டமாட்டான் அதாவது சரியானவிளக்கத்தை கொடுக்கமாட்டான்.

(3)வது வினாகேட்டவன் சுவாலில் இருப்பதைப்போல் கேட்டதாக நாம் வைத்துக்கொள்ளும் பட்சத்தில் இவ்விதம் கடிதத்தில் எழுதியிருந்தாலும்அல்லது நாவால் மொழிந்திருந்தாலும் (இன்) என்ற வார்த்தையானது இல்லை என்ற அருத்தத்திற்கு வருகிறபடியால் வினாவின் அருத்தமாவது காண்றப்புல் ஆலமீனாக யிருக்கவில்லை ஆயினும் திட்டமாக நான் ஒரு தகப்பனுக்கு மகனாகவும் பாதுஷாவுக்கு நாயாகவும் எஜமானின் ஆடுகளை மேய்க்கும் இடையனாகவுமிருக்கிறேன் என்பதே இந்த அருத்தமானது சுவாலின் பின்வருகிற வாசகத்திற்கு மிகவும் நேர்பாடாக இருக்கும் இவ்விதம் அருத்தம் கொள்வதை விடுவதற்கு எவ்வித நியாயமுமில்லை ஆனால் முஸ்லிமானவரை எவ்விதத்திலும் காபிராக்க வேணுமென்ற கெட்டகருத்தும் மனமூரண்டு முடையவனைத்தவிர மற்றவர்கள் இவ்விடத்தில் இந்த அருத்தத்தை (இன்க்காரு) செய்யமாட்டார்கள் ஏனென்றால் ஒரு சுவாலானது பல அருத்தங்களுக்கு இடம்பாடானதாக இருந்து மற்ற அருத்தத்தில் குபிர்வர கூடியதாகவும் ஒருவிதத்தில் குபிர் வராத்த விதமாக இருக்கும் பட்சத்தில்

அந்த ஒரு அருத்தத்தை எடுத்துக்கொண்டு இவன் காபிராக மாட்டான் என்று ஹுக்கும் செய்யவேண்டியது காளி, முப்த்தி இருவர்களின் பேரில் முக்கிய கடமை என்றும், இந்தப்படியே தான் இருவர்களும் நடக்க வேணுமென்றும், நூற்றிலொரு விதத்திலோ அன்றேல் ஆயிரத்திலொரு விதத்திலோ குப்ரை வருத்தாத்தாகவும் மற்ற எல்லா விதத்தாலும் குப்ரை வருத்தக்கூடியதாகவுமிருக்கும் பட்சத்தில் அந்த ஒருவித அருத்தத்தைக்கொண்டு குப்ரல்லவென்றே ஹுக்கும் செய்வது பத்வாஎழுதுகிறவரின் பேரில் கடமை என்றும், "தத்தார் கானியா, துரருல் அஹ்காம், ஷறகுஷ்ஷிபா, ஜாமிஉல்புசூலைன் பஹ்ருர்றாயிக், ரத்துல் முஹ்தார், பதாவாகுப்றா" முதலிய கித்தாபுகளில் வருவதற்கு மாற்றமாகவும் இந்த சுவாலானது குப்ரை வருத்தாத அருத்த முடையதென்று தெளிவாய் தெரிந்திருக்க குப்ரைக்கொண்டு ஹுக்கும் செய்தது பாத்திலாயிருக்கும் இதாகிறது சுவாலில் எழுதியதை நாவினால் மொழிந்திருந்தவனுடைய விஷயத்தில் சொல்லப் பட்டதாயிருக்கும் இல்லாவிடில் கடிதத்திலிவ்விதம் எழுதியிருந்தால் அதற்கு எவ்விதமான ஹுக்மும் கிடையாதென்றும் முன்னால் சொல்லப்பட்டிருக்கிறது (4)வது இந்தஹுக்முக்கு இமாம்களுடைய கிதாபு நக்லை ஆதாரமாய்க்கொண்டுவரவில்லை ஆனால் குர்ஆனுடைய இரண்டு ஆயத்தை எடுத்தெழுதியிருக்கிறார் அது இந்த இடத்தில் அவருடையஜவாபுக்கு ஆதாரமாகமாட்டாது. அதை ஆதாரமாகக்கொண்டு வருவதும் ஜாயிஜாகமாட்டாது. ஏனென்றால்பிந்தியகாலத்தில் பத்வாகொடுப்பதானால் கிதாபுகளின்நக்லு அல்லது ஸனதுள்ளரிவாயத்தை கொண்டுவருவதைத்தவிர மற்றப்படி தன் இஷ்டப்பிரகாரம் குர்ஆனின் ஆயத்துகளையோ அல்லது ஹதீதுகளைக்கொண்டோ பத்வா கொடுக்கக்கூடாது இமாம்களின் நக்லு இல்லாத்ததை பத்வாவென்று சொல்லவும் கூடாது ஏனென்றால் முப்தி யென்பவர் முஜ்தஹித் என்ற இமாமாயிருக்கு மென்றும் அவர்களின் காலம் ஹிஜ்ரி நானூறுக்குப்பின்முடிந்துவிட்டதென்றும் அதற்குப்பின் னுள்ள முஜ்தஹிதல்லாதவர்கள் முஜ்தஹிதுடைய சொற்களை எவ்வளவுதான்பாடமிட்டிருந்தபோதிலும் முப்த்திகளல்லவென்றும்

அவர்களிடத்தில் யாராவது பத்வாகேட்டால் அந்த முஜ்த்தஹி தான இமாம்களுடைய சொற்களையே கூட்டக்குறைக்காமல் இன்ன இமாம் இன்னவிதமாக சொல்லியிருக்கிறார்களென்று எழுதிக்கொடுத்துவிடுவதுதான் இவர்கள் கடமை யென்றும் இக்காலத்தில் பத்வாவென்று சொல்லப்படுகிறதெல்லாம் உண்மையில் இவர்களுடைய பத்வாவல்லவென்றும் இவர்கள்முப்தியல்ல வென்றும்அந்த இமாம் களுடைய சொற்களுக்குத்தான் பத்வாவென்றும் அவர்களுக்குத்தான் மூப்தி என்று சொல்லப்படுமென்றும் இப்போது இஜ்தி ஹாது செய்வது எல்லாவிதத்திலும் நீங்கி விட்டதென்றும் இந்தக்காலத்தில் பத்வாவென்பது அந்தக் காலத்து இமாம்களென்னும் முப்த்திகளுடைய வாசகங்களின் நக்லென்றும் இந்தக்காலத்தில் பத்வாவைஎழுதிக் கொடுப்பவர்களை (நாகிலென) நக்லெழுதுகிறவரென, சொல்லப்படுமென்றும் இந்தக்காலத்தில் பத்வா கொடுக்கும் விதமாவது அந்தக்காலமுதல் இந்தகாலம்வரையிலும் எல்லோரிடத்திலும் வழங்கிவந்த பிரபல்யமானகிதாபுகளின் நக்லை எடுத்தெழுத வேணுமென்றும் ''பஹ்ருர்ருயிக்,, தஹ்த்தாவி,, றத்துல் முஹ்த்தார்,, பத்ஹுல் கதீர்,, புசூலுல்இமாதிய்யா,, பதாவா ஆலங்கீரிய்யா,, பதாவா குப்ரு,, உத்தத்து அர்பாபில் பத்வா'' முதலிய கிதாபு களில் வந்திருக்கிறது இவ்விதமாக கிதாபின் நக்லை இந்த ஹாகுமுக்கு இவ்விடத்தில் ஸனதாககொண்டு வாமல் தன் இஷ்டத்திற்கு குப்ரைக்கொண்டு ஹாகும் செய்தது மகாபெரியவழிகேடாயிருப்பதுமன்றி பாதிலாகவும் மர்தூதாகவுமிருக்குமென்பது வெளியாகி விட்டது.

சகோதரர்களே திட்டமாக இந்த குலசேகரபட்டண தமீம் ஆலிம் சாயபு மதிமிரண்டு இந்த ஹாக்மில் சருகி அபாயகரமான இருளில் மூழ்கி விட்டார் விளக்கங்கள் நிறைந்த மேதாவிகளிடத்தில்இரட்சிக்கத்தேடி அவர்களின் உதவியைக்கொண்டுதானிவர்கரை பேறவேண்டும்

(கஷ்பு), கடைசி காலத்தில் மௌலூதான மசீஹாயிருக்குமென்று தாவா செய்தாலும் அதுபோலேயாம்.

(றம்யு) இவ்விடத்திலும் குலசேகரத்தார் சுவாலைப்பிரட்டி யிருக்கிறார் ஸ்வாலில்கடைசிகாலத்தில்மௌலூதான ஈசாவாகவும் முற்காலத்தில் சிலுவையில் வதையுண்ட மஸீஹாயிருக்குமென்று எழுதியிருப்பதை கொஞ்சமாவது எழுத்துத்தெரிந்தவர்கள் அதைப்பார்த்தால் அவரின் இந்த பிரட்டுருட்டை கட்டாயம் தெரிந்திருப்பார்கள்.

(கஷ்பு) மேலெழுதியபடி அவரின் கடிதத்தில் எழுதியிருக்கிறார்.

(றம்யு) இஃதோர் அபாண்டப்பொய்யாயும் இட்டுக்கட்டப்பட்ட வார்த்தையாயுமிருக்கும்.

(திருக்குர்ஆன்) "இட்டுக்கட்டிப்பேசினவனுக்கும், பாவமிகுதியாய் செய்கிறவனுக்கும், புறம் பேசுகிறவனுக்கும், கோள் சொல்லுகிற வனுக்கும், தான் உபகாரம் செய்யாமலிருப்பதுடன் உடலைக்கொண்டோ பொருளைக்கொண்டோ உபகாரம் செய்பவர்களை விலக்குகிறவனுக்கும், ஷறஹின் நெறிதவறி நடப்பவனுக்கும், வைலென்ற நரகத்தின் கடினமான வேதனை இருக்கிறது"

ஒருசமயம் கடிதத்தில் அவ்விதம் எழுதியிருந்ததாக வைத்துக்கொண்டாலும் அதைப்பற்றி குற்றமில்லை ஏனென்றால் கடிதத்தைக்கொண்டு ஹுக்மு செய்யக்கூடாதென்று முன்னாலே நாம் சனதுடன் சொல்லி இருக்கிறோம்.

(கஷ்பு) சுவாலில் எழுதியது குப்ராகவிருக்கும்

(றம்யு) இந்த ஹுக்மாகிறது மூன்று வித காரணங்களைக்கொண்டு பாத்திலாக இருக்கும்.

1வது இட்டுக்கட்ட பட்டதாயிருக்கும் உண்மையில் அவ்விதம் எழுதப்படவில்லை, ஏனெனில்தமிழிலிருந்தபடியே அரபியில் திருப்பி இருக்கும் பக்ஷத்தில் நான் இன்னாராக விருக்குமென்று (தன்மையிடமாக) எழுதி இருக்கவேண்டியது, அவ்வாறின்றி அவர் இன்னாராக இருக்குமென்று (காயிபானளமீர்-படர்க்கையிடம்) அன்னியனை சுட்டிக்காட்டும் வாசகத்தைக்

கொண்டு எழுதியிருப்பதாலும் தமிழிலொருவிதம் அரபியிலொருவிதம் பைத்திலொருவிதம் ஜவாபிலொருவிதம் கடிதங்களிலொருவிதம் இவ்வாறு ஒன்றுக்கொன்று கூட்டிக்குறைத்து எழுதியிருப்பதே குலசேகரத்தாரின் குபாடத்திற்கு போதிய ஸனதாகும் (2வது) கடிதத்திலெழுதி இருப்பதாக பத்வாவிலெழுதியிருக்கிறார் கிதாபுகளின் சனதைக்கொண்டு நாம் முன்னால் பல முறைபயான் செய்திருக்கிற பிரகாரம் கடிதமெவ்விதமிருந்தபோதிலும் எழுதினவனை விஜாரித்து அதை அவன் உண்மைகொண்டு வாயால் மொழியாதவரையில் அக்கடிதத்தைக்கொண்டே எவ்வித ஹுக்மும் அமலும் செய்யக்கூடாது (3வது) ஈசா அலைஹிஸ்ஸலாம் யூதர்களால் சிலுவையில் அறையப்படாமலும், கொல்லப்படாமலும் அல்லாகுத்த ஆலா அவர்களை தன்னளவிலுயர்த்திக் கொண்டான் ஆனபோதே யஹூதிகளிலொரு கூட்டம் ஈசா அலைஹிஸ்ஸலாத்தையும் அவர்களின் தாயாரையும் எசி சபித்ததாகவும் அல்லாகுத்த ஆலா அவர்களை குரங்குகளாகவும் பன்றிகளாகவு மாற்றியதும் யஹூதிகளெல்லாம் அவர்களைக் கொன்றுபோட தீர்மானித்து விட்டார்கள் அப்போது அல்லாஹுத் தஆலா ஈசா (அலை) அவர்களை வானலோகத்தளவிலுயர்த்துவதாக தெரியப்படுத்தியதும் தங்களைச்சேர்ந்தவர்களை நோக்கி உங்களில் யாராவது என்றுருபம் கொண்டு எதிரிகளின் கையிலகப்பட்டு சிலுவையிலறையுண்டு கொல்லப்பட்டு சொர்க்கத்தில் புகுதவைக்கப்படுவதற்கு பொருந்துகிறீர்களாவென்று ஈசா (அலை) கேட்டதற்கு அவர்களில்நின்று மொருவர் அதற்கு சம்மதித்து எழும்பிநின்றதாகவும் உடனே அல்லாஹுத் தஆலா அவரை ஈசா நபியின் ரூபமாய் ஆக்கிவிட்டான் அவர் எதிரிகளால் பிடிக்கப்பட்டு சிலுவையில் கொல்லப்பட்டாரென்று தப்சீர் பைளாவியில் எழுதப்பட்டிருக்கிறது ஆகையால் சுவாவில் எழுதியபடி ஒருவன் சொல்லும் பக்ஷத்தில் ஒருபோதும் தன்னை நபி என்று வழுக்கடித்தவனுகான் இதுவுமன்றி குலசேகரத்தார் கஷ்புன்னிகாயில் எழுதியபடி அவருடைய மகாமாகிறது ஈசவிய்யத்தான மகாமாயிருக்குமென்று ஏற்படுத்திக் கொள்ளும் பக்ஷத்தில் ஈசா அலைஹிஸ்ஸலாமில் நின்றும் வெளியான அற்புதங்கள் போல் இவரில் நின்றும்

வெளியாகாமலிருப்பதே அவசியமென்பது பின்னுல் தெளிவாய் வருகின்றன, எந்த விதத்திலும் தன்னை நபி என்று தஃவாசெய்ததாகச்சொல்ல இடம்பாடே யில்லை இவ்விதமிருக்க குப்ரு விஷயமாகுவதெங்ஙனம் ஆகையால் கடிதத்தைக்கொண்டு கொடுத்த பத்வா பாதிலாகவும் அவர் பேரிலேயே றத்துச் செய்யபட்டதாகவுமிருக்கும்.

(கஷ்பு) மவ்வூதான மஸ்ஊபாண மஸீஹ் ஈசாவாக இருக்குமென்று எழுதினவன்தன்னை நபிஎன்று தாவாசெய்த வனைப் போலாவான்,

(றம்யு) இதற்கு ஆதாரமாக பெரியோர்களான இமாம்களுடையகிதாபு களில்நின்றும் சனது கொண்டுவரவேண்டியது கடைமை யாயிருக்க ஆதாரமற்ற பேச்சையாரும் ஒப்பார்களென்பதை குலசேகரத்தார் நிட்டமாய்தெரிந்தும் ஸனதின்றி "நபியென்று தஃவாசெய் தவனுவான்" என்றவார்த்தயைதன் பிரியப்படி எழுதியுள்ளார் ஆனல் அல்லாமா, அபுல்பறகாத் அல்லாமாதிக்சாரீ ( றஹ ) வைத்தொட்டும் கொண்டு வந்த நக்லு இந்தஇடத்தில் பிரயோஜனம் கொடாது அவர்களின் கருத்தும்நுபுவத்தின் (மஃனு) கருத்தும் இன்னதென்பதை இவர்அறியாத காரணத்தால் அவ்விருஇமாம்களையும் ஒரு புறமாகவிட்டுவிட்டு இவஒருபடுகுழியில் விழுந்துகிடக்கிறூர் ஏனென்றூல் நாயகத்திற்கு பிறகுயாதொருவன் தனக்குநபிப் பட்டம் வந்து தான் நபியாயிருக்குமென்று வழக்கடித்தவன் காபிராயிருக்குமென்று அவ்விருநாதாக்களும் ஹுகும்செய்திருக்கிறூர்கள் இந்தஇடத்தில் நபிஎன்ற தஃவாவு மில்லைமஸ்ஊபானவர் நபியல்லாததால் நபிஎன்று தஃவா செய்தவனுவானென்று சொல்வதர்க்கு அறவே இடமபாடுமில்லை

(கஷ்பு) ஈசாநபியில் நின்றும் வெளியான அற்புதங்கள் அந்தமகாமை உடையவரில் நின்றும் வெளியாகுவது அவசியம் ஆதலால் அவரில் நின்றும் வெளியாக்கத்தேடவேண்டும்.

(றம்யு) அவரில் நின்றும் அவ்விதம் வெளியாகுவது அவசியமல்ல, வெளியாக்க அவரைதேடவும்கூடாது வெளியாக்க

தத்துவ மிருந்தபோதிலும் வெளிக்கவும்கூடாது என்கிலும் மறைப்பது கடமை.

நபிமார்களைக்கொண்டு ஈமான்கொள்ளவேண்டியது அவசியமிருப்பதால் அற்புதம் காட்டவேண்டிய சமயத்தில் அதை வெளியாக்குவது அவர்களுக்கு அவசியமென்றும் நபிமார்கள் அல்லாத மற்ற அவர்களின் மகாமைச்சேர்ந்த ஒளலியாக்கள் அதைவெளியாக்குவது அவசியமல்ல ஆனல் அதைமறைப்பதே அவர்கள்பேரில் வாஜிபு. இதுதான் சுன்னத்துஜமா அத்தின கொள்கை என்று "ஷஹ்ருனி இமாம் யவாகீதிலும், இப்னுஹஜர் றஹ்மஹுல்லாஹு பத்தாவாகுப்ருவிலும், மஹபூப்சுப்ஹானீ முஹிய்யிதீன் அப்துல் காதிர் ஜேய்லானி(றலி) குன்யத்துத்தாலிபீன் என்கிற கிதாபிலும், குத்புல் ஆரிபீன் ஷேய்குல் அக்பர் முஹிய்யித்தீன் இப்னுஅரபி (றலி) புதூஹாதுல் மக்கிய்யாவிலும்" எழுதி இருக்கிறார்கள் ஆனபோதே பாவத்தை வெளியாக்குவது பாவமென்று முஸ்லிம் புகாரியைதொட்டும் றத்துல் முஹ்தாரிலும், எதைச்செய்வது ஹறாமோ அதைச்செய்யத்தேடுவதும் ஹறாமென்று அஷ்பாஹிலும் வந்திருப்பதால். நபிமார்களின் மகாமையுடைய வாரிஸ்களான வலிமார்கள் நபிமாரைப்போல் அற்புதங்களை வெளியாக்குவது அவசியமல்ல அவரிடத்திலதை வெளியாக்கத்தேடுவதும் கூடாத விஷயமாயிருக்கும் (இவ்விதம் தேடுவதானது மானியை மறைப்பது வாஜிபென்றுமறைத்துக்கொண்டவனை அதைவெளியாக்கிகாட்டென்றுகேட்டதுபோலாகுமென்பது வெட்ட வெளிச்சமாயிருக்கும்)

(திருக்குர்ஆன்)ஏழைகளுக்குநீங்கள்ஏதாவதுகொடுக்கநாடும்பொழுது இதைக்கொடுக்கவேண்டாம் கொடுத்து வந்தால் நீங்கள் ஏழையாகபோய்விடுவீர்களென்று ஷைத்தான் உங்கள்மனதில் ஊசாட்டத்தைப்போடுவான் இன்னும் பெரிய பாவமான கெட்டகருமங்களைச் செய்யும்படி ஏவுவான்.

(கஷ்பு) அவ்விதம் அவரில் நின்றும் வெளியாகாவிடில் அவர் காபிரென்று திட்டமாயறிவோம்-

(றம்யு) "தப்பன்லக வலிஹாதல் இல்மி உப்பின்லக வலஹுவ'! அவரை ஹலாக்கு செய்யும்படியான இந்த குற்அறிவை

ப்பற்றி நான் பொருத்தக்குறைவாகுகிறேன் குத்புற்றப்பானீ மூஹிய்யதீன் அப்துல்காதிர் ஜெய்லானீ, குத்ப்புற்றபானீ இமாம் அப்துல் வஹ்ஹாபுஷ் ஷஹ்ருனீ, முஹிய்யித்தீன் இப்னுஅரபி, இமாம் ஷெய்கு ஷிஹாபுத்தீன் அஹ்மதிப்னு ஹஜரில் ஹைதமிய்யி, இமாம் இப்னுல் இமாத், ஷைகு அபூமுகம்மது நைசாபூரி, கத்தசல்லாஹு சிற்றஹும்'' இப்பேர்ப்பட்ட கல்விக்கடலாகிய பெரிய மகான்களெல்லாம் நபிமார்களைத்தவிர மற்றவர்கள் அற்புதங்களை மறைப்பது வாஜிபென்று தீர்மானம் செய்திருப்பதற்குமாறாக அற்புதங்களை வெளியாக்குவது வாஜிபென்று குலசேகரத்தமீம் சாயபு ஹுக்மு செய்ததாவது நரகத்தின் அருகில் வீட்டைக்கட்டி அதில் நுழைகையில் நரகத்தில் தவறி விழுந்தவனைப்போல் ஜஹாலத்தென்ற வீட்டை கட்டி அதில் நுழைந்ததில் ஜலாலத்தென்ற நெருப்பில் விழுந்துவிட்டார். இந்ததுர் அறிவை விட்டுதவ்பாச்செய்து மீண்டு மேற்சொல்லிய மகான்களை துயர்ந்து நடப்பது அவரின் கடைமையாகும்.

(திருக்குர்ஆன்) பஹிரங்கமாய்தெரியப்படுத்துவதைத்தவிர வேறொன்றும் எங்கள் பேரிலில்லை.

வாஜிபை செய்தவனை காபிரென்று தன் இச்சைக்கிசைந்து கெட்ட எண்ணத்தின் மனமுரண்டினால் ஹுக்மு செய்தது விந்தையினும் விந்தை.

(திருக்குர்ஆன்) ஹிர்ஸு ஜஹ்லென்னும் மயக்கத்தில் பிரண்டு கிடந்து பொய்யை மெய்யைப்போல் பேசுகிறவர்களை லஃனத்துச்செய்யப்படும் பொய்யை மெய்யைப்போல் கட்டிபேசுவதைத்தவிர இவர்களுக்குவேறறிவென்பதே கிடையாது.

(கஷ்பு) அற்புதம் வெளியாகாவிடில் அவர் அல்லாவைக் கொண்டு காபிராயிருக்கும்.

(றம்யு) அற்புதங்காட்ட தத்துவமிருந்த போதிலும் அதை மறைத்துக்கொள்வதுவாஜிபென்று அவர் மறைத்துக்கொண்டால் வாஜிபை செய்ததருப்ரென்றுஹுகும் செய்ததும் இந்தஹுகுமைகொண்டு சரிஎன்றுஅகீதாவைப்பதும் ஷரீஅத்தை இன்கார் செய்து பரிகாசம் பண்ணியதாகும் ஏனென்றால் ஷரீஅத்துடைய

ஹுகும்கள் ஐந்தாயிருக்கும் வாஜிபு, ஸுன்னத்து, முபாஹ், மக்ரூஹ், ஹறும். இவைகளிலொன்றை இன்காரு செய்தவன் காபிராவான் என்று இஃலாம் என்ற கிதாபிலும் ஷரீஅத்தை பரிகாசம் செய்தவன் காபிராயிருக்குமென்று அஙாயிது நஸ்பி ய்யா விலும் வருகின்றன.

திருகுர்ஆன் அல்லாகுத்த ஆலா இறக்கிய பிரகாரம் ஹுகும் செய்யாமல் அவனின் குர்ஆனுக்கு மாறுக ஹுகும் செய்பவர்கள் காபிர்களாயிருககும்.

ஈசவிய்யத்தானமகாமை சேர்ந்தவர்களுக்கு ஈசாநபியில் நின்றும் வெளியான அற்புதங்கள் வெளியாக வேணுமென்றும் வெளியாகாவிட்டால் காபிரு இருக்குமென்றும் எழுதிய ஜவாப்னது மேற்காட்டிய அனந்த காரணங்களைக் கொண்டுகுலசேகரத்தாரின்மானத்தை பங்கப்படுத்தும்படியான வீண்வார்த்தையாகவுமிருக்குமென்பது திட்ட வெட்டமாய் வெள்ளிடை மலை போல் வெளியாகிவிட்டது.

(கஷ்பு) கைப (மறைவுதலை) அறிவேனென்று சொல்வதும் அதைப்போல் குப்ராயிருக்கும்.

(றம்யு) ஒருபோதும் குப்ரல்ல ஏனெனில் ஒரு மூமினுகிய மனிதன் கைபை அறிவேனென்று சொன்னல் காபிராகுவானு அல்லது அறிவது ஆகுமாயிருப்பதினுல் சொன்னவனில்னின்றும் அவனின் கருத்தை விஜாரிக்க வேண்டுமாவென்ற வினுவுக்கு அந்த வார்த்தை பல அருத்தங்களுக்கு இடம்பாடுள்ளதாயிருப்பதால் குப்ரைக்கொண்டு ஹுகும் செய்யக்கூடாதென்றும் குப்ருக்கும் குப்ரல்லாத்ததற்கும் இடம்பாடான வார்த்தையைக் கொண்டு பேசுவானேயாகில் அவனிடத்திலேயே அதன் கருத்தை விபரிக்கத்தேடுவது வாஜிபென்றும் இவ்விதம் றவ்ளா, வகையறுகளில்வருகிறதென்றும் இதற்கு தலீல் ஸஹீஹான ஹதீதில் நாயகம் சொல்லி இருப்பது போதுமென்றும் இமாம் இப்னுஹஜர்றஹ மஹுல்லாவின் பதர்வா ஹதீதிய்யாவில் வருகின்றன இதாகிறது ஷெ இமாமவர்களிடத்தில் கேட்ட வினுவும் அதற்கு விடையுமாயிருக்கும் இன்னும் ரூஹானது

பூமியில் இருப்பதையும் வெளிரங்கமான உலகத்திலுள்ள வஸ்த்துக்களையும் அறிந்துகொள்ள அதற்கு சக்திஇருப்பது போல் வானத்திலுள்ள வைகளையும் மலகூத்தென்னும் உள்ரங்கமான ஆலத்திலுள்ள வைகளையும் அது அறிந்துக் கொள்ளக் கூடுமென்றும் இன்னும் அந்த ரூஹானது இந்த உடலிலிருந்துக் கொண்டே தனக்கு முன்னுள்ளதைப் பார்ப்பது போல் பின்னுள்ளதையும் பார்க்குமென்றும் இன்னும் மிஸ்ரில் இருந்து கொண்டே மிஸ்ரிலுள்ள வனைப்பார்ப்பதுபோல் யாதொருவித்தியாசமன்றியே ஸீன் தேசத்திலுள்ளவனையும் பார்க்குமென்றும் ஸபீலுஸ்ஸஆதத் தென்ற கிதாபில் வருகின்றன.

இன்னும் அல்லாகுத்தஆலா தன்னுடைய (கைபிய்யத்தான அன்வாரு) மறைவான ஜோதிபிரகாசங்களை எல்லா கல்புகளை விட்டும் மறைத்திருப்பதாயும் நபீமார் றசூல்மார்களுடைய ரூஹூகளுக்கும், ஸித்தீகீன்களுடைய (அக்லு) புத்திகளுக்கும், ஆரிபீன்களுடைய கல்புகளுக்கும் தவ்ஹீதுடையவர்களின் ஸிற்றுகளுக்கும், அந்த ஒளிவுகளை வெளியாக்கிறுனென்றும் அவர்கள் அந்த ஒளிவுகளைக் கொண்டு கைபுகளை அறிகிறுர்களென்றும் தப்சீர் அறாயிஸுல்பயா னில் வருகின்றன பறுஸத்தென்பது நப்ஸின் திரைகள் நீங்கி அந்த நப்ஸானது கைபான விஷயங்களைப் பார்ப்பதாயிருக்கும் இதாகிறது ஈமானுடைய பதவிகளில் நின்றுமுள்ளதாயிருக்குமென்று துஹ்பத்துல்அஆலீ என்ற கிதாபில் வருகின்றன இன்னும் கல்பையுடையவர்கள் முழிப்பிலேயே மலக்குகளையும் நபிமார்களுடை ரூஹூகளையும் சிலசமயங்களில் பார்ப்பார்கள் அவர்களுடைய சப்தங்களைகேட்பார்கள் அவர்களில் நின்றும் அநேக பிரயோஜனங்களை பெற்றுக்கொள்வார்களென்றும் கஸ்ஸாலி இமாமைத் தொட்டும் புதூஹாதுல் அஹ்மதிய்யா வென்ற கிதாபில் வருகின்றது. இன்னும் ஈமானின் னூரைக் கொண்டும், ஆண்டவன் அறிவிக்கிறது கொண்டும் அடியார்கள் கைபை அறிவது உண்டென்றும் அவ்விதம் கைபை அறிவேன் என்று சொல்வது குபுரல்லவென்றும் "நூருள்ளலாம் நஃஹதுல்பிதாயாத்து, கூத்துல்குலூபு, கலாயிதுல் ஜவாஹிர், இப்றீஜ கிதாபுல் அன்வார், ஹாஷியத்துல் கும்மதரு, நப்ஹதுல் அஹ்மதிய்யா, ஷிப்ருவி, தப்சீர்ஜமல், தப்சீர்கபீர், தப்சீர்அன்வாருத்தன்

ஸீல், தப்சீர் அபிஸ்ஸுஊது, தப்சீர்இப்னுஜரீர், தப்சீர்ஸிறுஜுல் முனீர்'' வகையறா முதலிய கிதாபுகளில் வருகின்றன.

(கஷ்பு) கைபுதெரியுமென்று சொல்வது குர்ஆன் நஸ்ஸுக்கு முரணாகுது.



(றம்யு) ஒருக்காலமும் குர்ஆனின் நஸ்ஸுக்கு முரணாகாது ஏனென்றால் அடியான்கைபை அறிவானென்பதற்கு அருத்தமாவது ஆண்டவன் அறிவிக்கிறது கொண்டு அறிவானென்றும். அல்லது சில ஸபபுகளைக் கொண்டுஅறிவானென்றும் குர்ஆனின் நஸ்ஸுக்குமஃனாவாகிறது.



ஒருவருமறிவிக்கிறதன்றி தன்னைக்கொண்டுதானே எல்லா வித ரகசியங்களையும் யாதொருமறைவின்றி சூழ்ந்தறிகிறவன் ஆண்டவனைத்தவிரயாருமில்லை என்றகருத்தாகவிருக்குமென்று நவவி இமாம் தங்களுடைய பதாவாவில் பகிரங்கமாய் சொல்லி இருப்பதாலும் அடியான் கைபை அறிவேனென்று சொல்வது கொண்டு இவனுடைய அறிவு அல்லாவுடைய அறிவுக்கு ஒப்பாகாதென்றும் இது திலாம்பரமான பேச்சென்றும் "பதாவா ஹதீதிய்யா,ஷவாஹிதுல் ஹக்கு,ஜாமிஉல்புசூலேன்,தப்சீர்பஹ்ருல் முஹீத்து," முதலிய கிதாபுகளில் வருகின்றன இதுவுமன்றி ஒருவன் சிலவிஷயங்களிலோ அல்லது அனேக விஷயங்களிலோ கைபை அறிவேனென்று தஃவா செய்தவன் காபிராகமாட்டானென்றும் இவ்விதம் குறிப்பில்லாமல் பொதுப்படையாய் கைபை அறிவேனென்று சொல்வதும் எல்லாசூரத்துகளிலும்குப்ரல்லவென்றும் அத்றஇய்யி இமாமைத் தொட்டும் இஃலாமென்ற கிதாபில் வருகின்றது

இன்னும் ரத்துல் முஹ்தாரில் நின்றுல் கஷ்புன்னிகாபில் கொண்டு வந்தவாசகத்தின் முன்பின் வாசகங்களை சேர்த்து பார்க்கையில் அதன் கருத்தும் முன் எழுதப்பட்ட நவவிஇமாமவர்களுடைய கருத்தை உடையதாகவே இருப்பதால் அந்த நக்லும் நமக்கே பிரயோஜனத்தை தரத்தக்கதாகவேயிருக்கிறது ஆகையால் கைபை அரிவேனென்று சொல்பவனை காபிரென்று ஹுகும் செய்ய யாதொரு முகாந்தரமுமில்லையாதலால் இதந்

ஹறாமும் பாதிலாக இருக்குமென்பது மேற்கூறிய கிதாபுகளின் ஆதாரங்களால் திட்டவெட்டமாய் தெரியவருகிறது குலசேகரப் பட்டணகலீபதுன்னிபாகிய்யா ஜிந்தீக்தமீம் காஹுக்குஒருமௌலாவின் கோரிக்கைப்படி முஸ்லிமை காபிராக்கவேணுமென்ற பேராவலிருந்தபடியால் பெரிய இமாம்களான மகான்களாலும் தப்சீருடைய உலமாக்களாலும் சொல்லப்பட்டவைகளுக்கும் சுன்னத்து ஜமா அத்தின் கொள்கைகளுக்கும் விரோதமாய் குபுரென்று எழுதிவிட்டார் றத்துல் முஹுத்தாரில் நின்றுகொண்டு வந்த வாசகத்தின் அடுத்த வரியைப்பாராமல் அவர்கண் குருடாய் விட்டது ஆகையால் ஹறவாவின் இச்சைக்கிணங்கி எழுதிய இந்த ஹறாக்குபு பாதிலாகவும் மர்தூதாகவும் ஆகி விட்டதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கிவிட்டதென்பதில் ஐயமில்லை.

(திருகுர்ஆன்) வெளிக்கண்கள் குருடல்ல ஆயினும் நெஞ்சுகளில் தரிபட்ட மனக்கண்கள் குருடாயிருக்கும் இவ்விடத்தில் இவ்வித குருடன் அவ்விடமென்ற ஆகிறத்திலும் குருடனாகவே இருப்பான்.

(கஷ்பு) இஸ்லாமில் இல்மைக்கொண்டு வழக்கடிக்குதல் மிகுதமாய் விட்டது இவ்வித வழக்கடிப்பவர்கள் இப்லீசின் பதவியிற் சேருவார்கள் இஸ்லாமல்லாத்ததில் இவ்விதம் கிடையாது. வழக்கடிப்பதின்பேரில் நான் வ்யசனப்படுகிறேன் வதனிகள் பேரில் எனக்கு கிருபை அதிகமேற்படுகின்றது இவ்விதம் தன்னுடைய கடிதத்தில் எழுதிஇருக்கிறார் இதாகிறது இல்மையும் இல்மை உடையவர்களையும் இலேசுகண்டதாகும் இன்னும் தீனைபரிகாசம் செய்ததாகும்.

(றம்பு) இல்மை படித்தபின் தாழ்மையும் தீனின்ஊக்கமும் தீனை விருத்தி செய்வதில் தெண்டிப்பு மிருக்கவேண்டியது இல்மை உடையவர்களுக்கு அவசியமாக இருக்கும் அவ்விதமில்லாமல் இல்மைக்கொண்டு வழக்கடிப்பதும் பெருமை பாராட்டுவதும் இப்லீசின் குணமாதலால் இத்தகைய குணமுடையோர் இப்லீசின் பதவியிலாவாரென்றும் வினவில் எழுதப்பட்ட அந்த வாசகம் இல்மையும் இல்மை உடையவர்களையும் இலேசு

கண்டதாகவும் தீனை பரிகாசம் செய்ததாகவும் ஆகமாட்டாது,

இவ்விதம் வழக்கடித்து பெருமை பாராட்டிக்கொள்ளுகிறதற்காக எழுதப்பட்ட வாசகத்தை இவ்விதமான கருத்தை விட்டும் திருப்பி இல்மை இல்லை தேடினதாகவும் தீனைபரிகாசம் செய்வதாகவும் கருத்துக் கொள்வதற்கு யாதொரு காரணமுமில்லை ஆகையால் சுவாமிலெழுதியபடி கடிதத்தில் எழுதி இருப்பது மெய்யாக இருக்கும் பக்ஷத்தில் சுவாமிலெழுதப்பட்ட வாசகமாகிறது தீனின் ஊக்கமும் பிரியமும் இருக்கிறதனவிலும் துன்யாவுடைய உலமாக்களின் பேரில் கைசேதப்படுவதனவிலும் அறிவிக்கு மென்பது நன்கு புலப்படுகிறது ஏனென்றால் சிலர் இல்மைக்கொண்டு தங்களை மேலாகவும் மற்றவர்களை இலேசாக எண்ணி பெருமை யடிக்கிறவர்களாகவுமிருப்பவர்களில மிருதும் இஸ்லாத்தைவிருத்தி செய்யும் பொருட்டு மறதிவாளர்களை வணக்கத்தனவிழுக்கவும் காபிர்களுக்கு ஈமானிஸ்லாமின்னதென்பதை விளக்கிக்காட்டி குப்ருஷிர்க்குகளை விட்டு அவர்களை நிவர்த்தி செய்ய வேண்டிய கடமை தங்களுக்கிருந்தும் கடமைகளைச்செய்யாமல் விட்டு விட்டு துன்யாவெனும் குப்பை கூளங்களை தேடுவதின் பேரில் மூழ்கி அதேயாக்கில் இரவு பகலாயிருந்து தீனுடைய ஊழியத்தை விட்டு விட்டார்கள் காபிர்களுக்கு தீனை எடுத்து போதிக்காமலிருப்பதால் அவர்கள் ஈமான் இஸ்லாமின்ன தென்பதை தெரிந்துகொள்ள முடியாமல் ஆதி குப்ரிலேயே தரிபட்டிருந்து இறந்து போகிறார்கள் என்று விசனப்பட்டு இத்தகைய குணமுடையோர் இப்லீசின் பதவியுடையோரென்றும தீக்குடையோர்களென்றும் சொல்லி இருக்கலாம் இவர்மாத்திரமின்ன முற்காலத்திலுள்ள நாதாக்களில் அனேகர்கள் துன்யா உடைய உலமாக்களை பற்றி தூஷணித்து பேசி இருக்கிற சங்கதிகளை குதுபுற்றப்பானிபத்ஹுஜ்ஜதுல்இஸ்லாம் இமாம் கஸ்ஸாலிற ஹுமஹுல்லா அவர்கள்இஹ்யா உலூமுத்தீனில் விரிவாய் எழுதி இருப்பதில் சிலதை இவ்விடத்தில் எடுத்தெழுதுகிறேன் அஃதாவன

"துன்யா தாழ்ந்ததென்பதையும் அதனின்பம் பல துன்பங்களுடன் கலந்திருப்பதையும்அதனுடைய தெளிவுகள் யாவும் எடுபட்டுபோயிருப்பதையும் அறியாதவனெவனோ அவன் புத்தி கெட்

டவன் என்றும் புத்திகெட்டவன் எவ்வாறு உலமாக்களில் நின்றுமாயிருப்பான் என்றும்.

ஆகிரத்தின் வாள்வு நேமமான வஜுப்பான தென்பதையறியாதவன் வெளிரங்கத்தில் மூமின் வேஷங்கொண்டிருந்தாலும் அந்தரங்கத்தில் ஈமானிழந்த காபிராயிருக்கும் ஈமானில்லாதவன் எப்படி உலமாக்களில் நின்றுமுள்ளவனு வானென்றும்.

துனியாவாகிறது ஆகிரத்துக்கு மாற்றமான தென்பதையும் அவ்விரண்டையும் தேடுவது வீண்பேராசை என்றும் இரண்டிலொன்றை தேடினுல் மற்றொன்றுதவரிவிடுமென்றும் அறியாதவன் எல்லா நபிமார்களுடைய மார்க்கங்களையு மறியாத மடையன் குர்ஆனைக்கொண்டு காபிருயிருக்கும் இதுகளெல்லாவற்றையும் அறிந்துதுனியாவைவெறுத்து ஆகிரத்தை தெரிந்துகொள்ளாதவன் உலமாக்களின் கூட்டத்தில் எப்படி எண்ணப்படுவானென்றும் இப்பேர்ப்பட்டவன் ஷைத்தான் கையிலகப்பட்டவன் அவனுடைய இச்சை அவனை ஹலாக்கு செய்து விட்டது மூதேவித்தனம் அவனில் மிகைத்து விட்டது இத்தகைய குணமும் பதவியுமுடையோர் எப்படி உலமாக்களுடைய கூட்டத்தில் சேருவாரென்று சொல்லி யிருக்கிறார்கள்''.

இன்னும் எவன் எதைப்பிரியம் வைப்பானே அதிலேயே அவன் மூழ்கிவிடுவான் ஆதலால் எந்த ஆலிமை துன்யாவின் பிரியத்துடையவராக தெரிந்து கொள்வீர்களேயானுல் தீனுடைய விஷயத்திலவரை சந்தேகப்படுங்கள் அவரை நம்பிவிட வேண்டாமென்று உமர்றலியல்லாஹு அன்ஹு சொல்லியிருக்கிறார்கள்.

இன்னும் இல்மடங்கலும் துனியாவை சேர்ந்ததென்றும் அதைக்கொண்டு அமல்செய்வதுதான் ஆகிரத்தை சேர்ந்ததென்றும் எந்த அமலில் இக்லாஸ் என்ற கலப்பறுதல் இடையாதோ அந்த அமலடங்கலும் காற்றிலகப்பட்டதூசி போலாகுமென்றும் ஸஹ்லுறலி யல்லாஹு அன்ஹு சொல்லி இருக்கிறார்கள்.

இன்னும் துன்யாவின் உலமாக்களை நோக்கி ''ஓ! இல்முடையவர்களே உங்களுடைய மாளிகையானது கைசறெனும்

ரும்பாத்ஷாவின் மாளிகைகள்போலும் உங்களின் வீடுகளானது கிஸ்ராவென்ற பார்சின் பாத்ஷா உடைய வீட்டைப்போலும், உங்களுடைய லிபாசானது ஆலிம் வேஷம் பூண்டவர்கள் போலும், உங்களுடைய போஜாவானது ஜாலூத் என்பவனுடையது போலவும் உங்களுடைய வாகனங்களானது காரூனுடையது போலவும், உங்களுடைய பாத்திரங்களானது மிஸ்ருடைய பாத்ஷா பிர்அவ்னுடையதுபோலும் உங்களுடைய பாவங்களாகிறது ஜாஹிலுடையதுபோலும், உங்களுடைய (செயல்கள்) மத்ஹபுகளானது ஷைத்தானுடையதாகவும் இருக்கிறதேயல்லாது முகம்மதிய்யாவான மார்க்கம் எங்கிருக்கிறதென்பது தெரியாமலாகிவிட்டது என்று எஹ்யப்னு மஆது றலியல்லாஹு அன்ஹு சொல்லி இருக்கிறார்கள்.

இன்னும் "இல்மைகஜானாவாக மறைத்து வைத்துக்கொண்டு அந்த இல்மு மற்றவர்களிடத்திலிருக்க பிரியப்படமாட்டார்களே அவ்வகையான உலமாக்கள் நரகத்தின் முந்தின தட்டில் இருப்பார்களென்றும், தன்னுடைய இல்மைக்கொண்டு சுல்தானைப்போலிருந்து தன்னுடைய இல்மில் நின்றும் யாதொன்றை றத்துச்செய்யப்பட்டாலும் அல்லது அவருடைய ஹக்கில் நின்றும் யாதொரு வஸ்துக்குறைந்துவிட்டாலும் அல்லது தன்னை இலேசாகக் கண்டதைக்கொண்டு கோபப்படுவார்களே அப்பேர்கொற்ற உலமாக்கள் நரகத்தின் இரண்டாம் தட்டிலிருப்பார்களென்றும், இன்னும் தன்னுடைய இல்மையும் நூதனமான ஹதீதுகளையும் சீமான்களுக்காக ஆக்கி அதின் ஹாஜத்துடையோர்களுக்கு அதைச் சொல்லாமலிருக்கும்படியான உலமாக்கள் நரகத்தின் மூன்றும் தட்டிலிருப்பார்களென்றும், பத்வா கொடுக்கிறதற்காக வேண்டி ஏற்பட்டு தவறுகளைக்கொண்டு பத்வா கொடுக்கும் உலமாக்கள் தங்களுக்கு இயலாத வேலையில் மதிப்பு மறியாதையை நாடி அதில் தலையிடுபவர்கள் பேரில் அல்லாகுத்த ஆலாவின் கோபமென்னும் மூனிவு இருப்பதால் இவர்கள் நரகத்தின் நாலாம் தட்டிலிருப்பார்கள் என்றும், இன்னும் தன்னுடைய இல்மை சங்கையாக்கி வைக்கிறதற்காக வேண்டி எஹூதி நசாராக்களின் பாஷையைக்கொண்டு பேசுவார்களே அப்பேர்க்கொத்த உலமாக்கள் நரகத்தின் ஐந்

தாவது தட்டில் இருப்பார்களென்றும், இன்னும் தன்னுடைய இல்மை ஜனங்களிலே கீர்த்திக்காகவும் பிரபல்யத்திற்காகவும் மதிப்புக்காகவும் ஆக்கிக்கொள்வார்களே அப்பேர்கொற்ற வுலமாக்கள் நரகத்தின் ஆறாவது தட்டிலிருப்பார்களென்றும் இன்னும் முகம் அழகாயிருப்பதும் தான்படித்தவனென்று தனக்குள் தானே சந்தோஷப்படுகிற தென்ற அகப்பெருமையும் இருப்பது கொண்டு தாங்கள் வஃலு சொல்லும்போது தன்னை மேலாகவும் சுத்தமாகவும் மற்றவர்களை லேசாகவும் அசுத்தமாகவும் எண்ணி மற்றவர்களை குறைகூறி வஃலுசொல்லுகிறதும் இவர்களின் குறைகளை எடுத்து யாராவது வஃலுவுபதேசம் அல்லது புத்திசொன்னால் எனக்கு எப்படி சொல்லலாமென்று கோவப்படுவார்களே அப்பேர்கொத்த உலமாக்கள் நரகத்தின் ஏழாவது தட்டிலிருப்பார்கள் என்றும் இஹ்யாவில் வருகிறது.

(கஷ்பு) படிப்பாளிகளை குறை கூறியதும் தீனைபரிகாசம் செய்ததும் குப்ராயிருக்கும்.

(றம்பு) இந்த ஹுக்மு (3) காரணங்களைக்கொண்டு பாத்திலாயிருக்கும் (1வது இந்த சுவால் இட்டுக்கட்டப் பட்டதாயிருக்கும் இது விஷயத்தை மேல் பன்முறையாய் வெளிப்படுத்தெழுதி இருக்கிறோம் ஆகவே உண்மையில் குப்ருஎன்ற ஹுக்மு தரிபடாது (2வது) அப்படியே கடிதத்தில் எழுதி இருந்தபோதிலும் வாயைக்கொண்டு மொழிந்திருந்ததுபோலும் வைத்துக்கொண்டாலும் அந்த வாசகங்கள் குப்ருக்குரிய தல்லவென்பதையும் இந்த பயானுக்கு முன்னால் விபரித்திருக்கிறோம். (3வது) கடிதத்தில் எழுதுவதுகொண்டு குப்ரு விஷயமாகாதென்றும் எழுதினவனிடத்தில் அதைக்கேட்டு விஜாரிக்கிறதன்றி அக்கடிதத்தைக்கொண்டு எவ்வித ஹுக்மும் செய்யக்கூடாதென்றும் இதற்கு முன் பல இடங்களில் கிதாபுகளின் ஆதாரத்துடன் எழுதியிருக்கிறோம்.

ஆனபோதே அந்தசுவாலானது துன்யா உடைய உலமாக்களைப்பற்றியும் தீன் விர்த்தி அடையாமல் மிஸ்கீனைப்போலிருப்பதைப்பற்றியும் உலமாக்கள் நபிமார்களின் வாரிஸ்களாயிருக்கும் அவர்கள் காபிர்களை கவனிக்காமலிருப் பதையற்றியும்

கைசேதப்பட்டு பேசியதாக அந்த வாசகம் துலாம்பரமாய் அறிவிப்பதை நன்றாய் கவனியாமல், இல்லை லேசாககண்டு விட்டதாகவும் தீனைப்பரிகாசம் செய்ததாகவும் குருட்டுத்தனமாய் தானே இந்த விதக்கெட்ட கருத்தை சுமத்தாட்டி எழுதிஇருப்பது மனமுரண்டும் மதியீனமுமாகும் ஒருவன் மனதில் உள்ள கருத்தை அவனிடத்தில் கேட்பதன்றியே தெரிந்து கொள்ள முடியாமலிருக்க வாக்கிலொன்று மனதிலொன்று பேசும் வழமையுள்ள குலசேகரப் பட்டணம் தமீம் கான் மட்டிலும் அவருடைய மனதைப் பிளந்து நுளைந்து பார்த்து விட்டாரோ? தவிர உலமாக்கள் அவர்களுக்கு லாயக்கில்லாதவேலைகளை செய்வதாலோ அல்லது அவர்கள் செய்யவேண்டிய கடைமைகளை செய்யாமலிருப்பதினாலோ அல்லது மனிதன் என்ற புறத்தினாலோ இவர்களை குறை கூறுவது குபுரல்லவென்று "ஹாஷியதுல் ஹமவி, பஹ்ருற்றயிக்," என்ற கிதாபுகளில் வருகின்றன. ஆகையால் குபுரென்றெழுதிய அவருடைய ஜவாபானது நாம் மேலெழுதிய காரணங்களால் சுத்தப் பிசகென்பது துலாம்பரமாய் வெளியாகிவிட்டது.

(கஷ்பு) நான்சொல்லும் இரகசியங்கள் முப்பது ஜுஸ்வின் பேரில் பொதிந்த இந்த குர்ஆனில் காணப்படா விடினும் அந்த குர்ஆனில் நின்றும் சிலது விபரிக்கப்படாமல் நம்மை விட்டும் மறைக்கப்பட்டிருக்கும் படியான பத்து ஜுஸ்வில் காணப்படுமென்று கடிதத்தில் எழுதி இருக்கிறார்.

(றம்யு) இவை இட்டுக்கட்டப் பட்டதாயிருக்குமென்பதில் நமக்கு யாதொரு சந்தேகமுமில்லை அவருடைய எழுத்துப்படி ஒருசமயம் கடிதத்தில் அவ்வித மிருப்பதாக வைத்துக்கொண்டாலும் கடிதத்தின் ஹக்கை முன் பலவிடங்களில் விபரித்திருப்பது நடுப்பகலில் பொழுதுவெளியானதைப்போலிருப்பதால் அவைகளை இவ்விடத்தில் விபரிக்க தேவை யில்லை.

(கஷ்பு) சுவாலில் மேல் எழுதியது குப்ருகஇருக்கும்.

(றம்யு) குப்ரென்று சொல்ல இடம்பாடே இல்லை ஏனென்றால் சுவாலின் நோக்கமாகிறது திட்டமாக குர்ஆனாகிறது முப்பது ஜுஜ்வாக இருக்குமென்பதில் சந்தேகமில்லை என்பதே. ஆனால்

சிலசூறத்துகளானது விபரிக்கப்படாமல் சுருக்கப்பட்டு வாசகத்தால் வட்டுருக்கமாக இருக்கிறது அவைகளில் இதாஜூல்ஸிலத் என்றசூறத்தும் வல்ஆதியாத்தி என்றசூறத்தும் பாதி குர்ஆன் அதாவது ஒவ்வொன்றும் பதினைந்து ஜூஸ்வின்பேரில் பொதிந்து இருக்கிறதாகவும் தவ்ஹீதெனும் குல்ஹூவல்லா என்றசூறத்தாகிறதுபத்து ஜூஜ்வின்பேரில்பொதிந்திருப்பதாகவும் குல்யா அய்யுஹல் காபிரூன் என்றசூறத்தாகிறது கால் குர்ஆனென்றும் ஏழரை ஜூஸ்விற்குச் சமமானதென்றும் நாயகம் றசூல்சல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் சொன்னதாக இப்னு அப்பாஸ்றலியல்லாஹூ அன்ஹூ வைத்தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டதாக தப்சீர்துற்றுல் மன்தூரில் வருகின்றன.

இன்னும் குர்ஆனில் முக்கியமான மஃரிபாக்கள் மூன்றென்றும் (1வது) தவ்ஹீது (2வது) ஸிறுத்துல் முஸ்தகீம் என்ற ஷரீஅத்து (நெறி) நீதம் (3. வது) ஆகிறம் ஆக இம்மூன்றில் குல்ஹூவல்லாஹ் சூறத்தாகிறது முந்தின மஃரிபாவென்ற தவ்ஹீதுடைய அஸ்றாருகளின் பேரில் பொதிந்திருக்கிறது கொண்டு குர்ஆனின் மூன்றிலொருபாகம் அதாவது பத்து ஜூஸ்விற்குசமமாக ஆய்விட்டதென்று ஹல்லுற்றுமூஸ் என்ற கிதாபில் வருகின்றது ஆனபோதே குர்ஆனுகிறது வெளிரங்கமான வாசகத்தின் புறத்தால் முப்பது ஜூஸ் வாகவிருக்கும் அதில் எவ்விதமான கூடுதல் குறைதல் அறவேகிடையாது குர்ஆனுகிறது அதனில் மறைந்திருக்கும் மஅனுக்களைக் கொண்டு மட்டுப்படாத்ததாக விருக்கும் இதன்படி நான் சொல்லும் இரகசியம் பத்து ஜூஸ்விலிருக்கிறதென்றால் அதின் கருத்தாவதுபத்துஜூஸ்விற்குசமமாகிய குல்ஹூவல்லா வென்ற சூறத்திலா யிருக்குமென்பதே ஆகையால் விளக்கம் குறைந்த இந்த குலசேகரப்பட்டணம் கலீபதுன்னிபாகிப்பா தமீம் கான் ஸூவாலில் சொல்லப்பட்ட கருத்தை விளங்காமல் தவறுதலிலும் அளிச்சாட்டியத்திலும் மூழ்கி தன் மனம்போன போக்கில் பேனாவை நீட்டிவிட்டார்.

இதுவுமன்றி இன்னொருவிதமாகவும் அருத்தம் கொள்ளலாம் அவை எவ்விதமென்றால் புர்கான் இரண்டு வகையென்றும் (1) தன்ஜீலெனும் (இபாரத்து) வாசகம் அதாவது ஜிப்ரீல் அலை

ஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் மூலமாய் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் கல்பின்பேரில் இறங்கிய முப்பது ஜுஸ்வாயிருக்கும் அது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வபாத்தைக்கொண்டு முடிவுபெற்று விட்டதென்றும் அவை இப்போது நாம் ஓதிவரும் முப்பது ஜுஸ்வாகயிருக்கும் (2வது) வகை தனஸ்ஸுலெனும் கருத்துகளாம் இதுவானது அவ்லியாக்களுடைய கல்புகள் தெளிவான ஸமயங்களில் அவர்களுக்கு அல்லாகுத்த ஆலா உதிப்பாக்கி வைப்பதைக்கொண்டு அவர்களுடைய கல்பின் பேரிலிறங்கும் அவர்களதை விளங்கிக் கொள்வார்கள் இந்த இறங்குதல் நாயகத்தின் காலத்தைக் கொண்டு முடிவடையாமல் கியாம நாள்பரியந்தம் இறங்கிக்கொண்டே இருக்குதென்றும் பத்வா கொடுக்கிறவர்கள் ஒருவிதமாய் கொடுத்து விட்டாலும் உன்கல்பிடத்தில் பத்வா தேடிக்கொள்ளென்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் இதளவில்தான் இஷாரச்செய்து சொல்லி இருக்கிறார்களென்றும் குத்புல்அக்தாப் ஷைகுஅபூமத்யன் றலியல்லாஹு அன்ஹுவைத்தொட்டும் தக்ரீபுல்உஸூலென்ற கிதாபில் வந்திருக்கிறது இன்னும் குர்ஆனை பாடமிடுவோர்களுக்கு இலேசாயிருப்பதற்காய் வாசகங்களை சுருக்கி இருக்கிறோமென்று சூறத்து கமரில் சொல்லி இருப்பதை தப்சீர் பைளாவியில் எழுதி இருக்கிறார்கள் இதின்படி அந்த சுவாலின் அருத்தமாவது நான் சொல்லும் இரகசியங்கள் தன்ஜீலெனும் இபாரத்தின் புறத்தில் காணப்படாது என்கிலும் பொதுவான ஜனங்கள் விளங்குகிறதை விட்டும் அந்த குர்ஆனிலேயேசுருக்கி மறைக்கப்பட்டிருக்கும்படியான மஅனாக்களில் தரிபட்டதாக விருக்குமந்த ரகசியத்தை விபரிக்கப்பட்டால் பத்துஜுஸ் வினுடைய ஹத்துக்கு இருக்குமென்பதே.

குர்ஆனுக்குள்ள அருத்தங்களோ மட்டிலடங்காது எனென்றால் நான் நாடுவேனேயானால் எழுபது ஒட்டகையின் சுமை அளவுக்கு சூரேபாத்திஹாவுக்கு அருத்தம் எழுதுவேனென்று அலியின்கற்றமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் சொன்னதாக அல்லாமா இமாம் பாஜூரி றஹ்மஹுல்லாஹ் ஷரகுபுர்தாவில் சொல்லி இருப்பதையும்

இன்னும் குர்ஆனாகிறது கடலைப்போலும் அதின் மஆனாக்களாகிறது அலைகளைப் போலுமென்றும், ஆனால் கடல் எழென்று மட்டுப்படுத்தப்பட்டிருந்தாலு அலைகள் மட்டிடாமலிருந்து வெளியாகிக்கொண்டேயிருப்பதுபோல் குர்ஆனாகிறது வாசகத்தால் 30 ஜுஸ்வு, 7 மன்ஜில், 114 சூறா, 6666 ஆயத்துகள் என்று மட்டுப்பட்டதாக இருந்தாலும் அதின் அருத்தங்கள் மட்டில்லாமலிருக்கிறதென்றும், பூஸரி இமாம் புர்தாவில் சொல்லி இருக்கிற கருத்துக்களையும்.

இன்னும் உலகத்திலுண்டாயிருக்கும் மரம் செடிகளெல்லாவற்றையும பேனாக்களாக்கி எழுகடலுடன் இன்னுமனேககடல்களையும் மையாக்கி எழுதின போதிலும் குர்ஆனின் கருத்துகளை எழுதி முடியாதென்று தப்சீர்ரூஹுல்பயானில் வருவதுபோல் குர்ஆனுடைய வாசகங்கள் அரபி அகராதிக்கு நேர்பட்டான லாஹிரான உலமாக்கள் விளங்கக்கூடிய வெளிரங்கமான மஆனாக்களிருப்பதுடனே இவைகளல்லாத(இஷாரிய்யத்து) பாத்தினான மஃனா கருத்துகள் உண்டென்றும் கல்பாகிறது நப்சானியத்தான வஸ்வாஸெனும் அசுத்தங்களை விட்டும் சுப்பரவாகும் நேரத்தில் றப்பானிபத்தான (பைளு) ஜலிப்பு இறங்கி முஷாஹதாவிற்கும்தெரிசனைக்கும் ஆண்டவனின் சம்பாஷணைக்கும் அந்த கல்பு லாயிகாகி விடுகிறதென்றும் மற்றவர்கள் விளங்காத விளக்கங்களை குர்ஆனின் இரகசியங்களை இவர்கள்விளங்கிக்கொள்கிறார்களென்றும் அவர்களுடைய இந்தக் கொள்கையாகிறது லாஹிரை ஒப்புக்கொள்ளாமல் பாதினை மட்டிலும் எடுத்துக்கொண்டவர்களின் கொள்கையல்லவென்றும் ஸூபியாக்களான மேலெழுதியவர்களின் இக் கொள்கையானது லாஹிரைவிடாமல் ஒப்புக்கொண்டு பாத்தினையும் எடுத்துக் கொண்டபடியால் இது ஹக்கானகொள்கை என்று தக்ரீபுல் உசூலில் வருவதையும் கவனிக்கில் ஒவ்வொருவர்களும் அவரவர்களுடைய கல்பின் தெளிவிலுண்டான விளக்கப்படி பத்து ஜுஸ்வென்ன ஆச்சரியம் சிலருக்கு ஆயிரத்தைக் கொண்டும் கூட மட்டுப்படாதென்றும் திட்டமாய்விளங்குகிறது. இவ்வளவு தெளிவான மஃனாவை சிற்றறிவுடைய சிறுவர்களும் அறிவாரென்பதில் ஐயமில்லை.

ஆயினும்தமீம்காரனென்ற குலசேகரத்தார் இதையறியாமல்

இருந்ததாகிறது லாகிர் யத்தினை இரண்டுவித இல்லைமவிட்டும் ஆரப்பட்டிருந்ததினாலோ அல்லது ஹக்கெனும் ஜோதிப்பிரகாசம் தூர்ந்து போய்விட்டதினாலோ அல்லது ரூபியாக்களின் ஞானங்கள் அவரில் ஊறுகிறதை விட்டும் அவருடைய மனம் கல்லைப்போல் வலுவடைந்து விட்டதினாலோவேறெந்தக்காரணத்தினாலோ நானறியேன்

(திருக்குர்ஆன்) தக்வாவை எடுத்து நடந்தால் அல்லாகுத்தஆலா கல்லை துறவடியாக்கிக்கொடுப்பான், அல்லாவை தக்வாசெய்யுங்கள் அல்லாஹுத்தஆலா உங்களுக்கு படித்துக்கொடுப்பான், ஓ! மூமினானவர்களே அல்லாஹுத்தஆலாவை தக்வாசெய்வீர்களானால் உங்களுக்குள்ளால் புர்க்கானென்னும் விளக்கத்தின் வாசலை திறப்பான்.

(கஷ்பு) சுவாலிலெழுதியது குர்ஆனிலே அதிகப்படுத்தியதாகும்.

(றம்யு) பஹ்மைக் கொண்டும் இல்ஹாமைக் கொண்டும் குர்ஆனின் கருத்துகளை எவ்வளவு விபரித்தாலும் குர்ஆனில் அதிகப்படுத்தியதாகச் சொல்வதற்கிடமில்லை ஏனென்றால் குர்ஆனின் வாசகத்தில் ஏதாவதொரு ஹர்பை குர்ஆனுடன் சேர்த்து இதுவும் குர்ஆனிலுள்ளதென்று நிர்ணயங்கொள்வது குப்ரென்று இஸ்லாமென்ற கிதாபை தொட்டும் குலசேகரப்பட்டண தமீம்ஸாஹிபுதனக்கு ஆதாரமாய்க் கொண்டுவந்த நக்லாகிறது இவ்விடத்தில் நமக்கு பிரயோஜனமாயிருக்கிறதேஒழிய அவருக்கு பிரயோஜனமற்றதென்பதற்கு சுவாலில் சொல்லப்பட்டமனிதனுக்கு இங்கிலீசும் தமிழும் தவிரவேறொன்றும் தெரியாதென்று சுவாலிலெழுதியிருப்பதும் இன்னுமவர் சொல்லிய இரகசியங்கள்யாவும் கருத்துகளாக இருப்பதும் இன்னும் மேலெழுதிய காரணங்களுமே அத்தாட்சியாம்.

ஒருசமயம் பேச்சைப்பிரட்டி அவருக்கும் அறபிதெரியுமென்று இந்த குலசேகரப்பட்டண தமீம்சாஹிபு பொய்க்கட்டு கட்டிச்சொல்லும் பக்ஷத்தில் அவர் குர்ஆனில் அதிகப்படுத்திய வாசகம் இன்னதென்பதை வெளியாக்குவதும் அந்தவாசகம் திருக்குர்ஆனில் நின்றுமுள்ளதென்று அவர்நிர்ணயங் கொண்டிருகிறென்பதும் திட்டமானாலேயொழிய [illegible]

யிருக்கும் ஆகையால் இப்போது இன்னவாசகத்தை அல்லது
இன்ன ஹர்பை குர்ஆனில் அதிகப்படுத்திய தாகவும் அது குர்
ஆனில் நின்றுமுள்ளதென்று நிண்ணயங்கொண்டிருக்கிறதா
வும் சுவாலில் எழுதப்படாத்ததாலும் இவ்விதம் அவரால் அதிக
ப்படுத்துவதற்கு இடம்பாடில்லாத்ததாலும் இவரெழுதிய குப்ரு
தமீம்சாயிபளவிலேயே மீண்டுவிடுமென்கிற பயங்கர மிருக்கிறது
மேலும் குப்ரைக்கொண்டு ஜவாபெழுதிய ஐந்து சுவால்களும்
குப்ருக்கு அறவே இடம்பாடில்லாத்ததாகவும் குப்ருக்கே
(நஸ்ஸில்லை) அதாவது குப்ருக்குரிய வாசகமில்லை என்பதும் வாஸ்
தவத்தில் இட்டுகெட்டப்பட்டதென்பதும் மேலெழுதிய பயான்க
ளினால் திட்டமாகி விட்டபடியால் இந்தக்காரணமற்ற வாசகத்
தைக்கொண்டு ஒரு முஸ்லிமாயிருப்பவரை காபிரென்றெழுதி
விட்டதுமன்றி பல இடங்களிலும் பலபேர்களிடத்திலும் இதை
பகிரங்கமாய்ச் சொல்லியிருப்பதாலும் இன்னும் சொல்லிக்
கொண்டு வருவதாலும் அவரை காபிரென்று எழுத்தில் தானே
எழுதினேன் எழுத்தைக்கொண்டு என்பேரில் குப்ரு விஷயமாக்
மாட்டாரென்று அன்னவர் சொல்லி தப்பித்துக்கொள்ள முடி
யாது தவலை தன் வாயால் அகப்பட்டதைப்போல் நாமிதுவரைச்
சொல்லி வந்த பயான்களைக்கொண்டு குலசேகர பட்டணத்து
தமீம் ஸாகிண்ணமாகவே (கலீபதுன்னிபாகிய்யா ஜிந்திக்தமீம்
கான்) என்ற பட்டத்துடன் உண்மையாக அகப்பட்டுக்கொண்
டாரென்பது யாவரும் நங்கறிந்த விஷயம் ஆகையால் கஷ்புன்னி
காபிலெழுதப்பட்ட ஐந்து சுவால்களும் தமீம்ஸா எழுதியபடி
அவருடைய கடிதத்தில் எழுதி இருப்பதாகவோ அல்லது
வாயால் மொழிந்ததாகவோ பாவனைசெய்து அவருடைய
ஐந்து ஜவாபுகளையும் றத்துச்செய்தோம் அந்த ஐந்து
சுவால்களும் குப்ருக்குரியதல்ல வென்பதையும் கிதாபுகளி
ன் முக்கிய சனதைக்கொண்டு தீர்மானித்து விபரித்தெழுதி
னோம் சுவாலிலெழுதியபடி கடிதத்தி லெழுதியிருப்பதையும்
அதை வாயால் மொழிந்தா ரென்பதையும் ரூபிக்காவிடில்
இட்டு கட்டப்பட்ட சுவால்களுக்கு ஷர்ஹின் கிதாபுகளு
க்குமாறான ஜவாபைக்கொண்டெழுதப்பட்ட கஷ்புன்னிகாபு
தானே பதிலாயிருப்பதால் இந்த ரத்தெழுத தேவை
யில்லை என்பது திண்ணம் எவ்வளவு காலம் சென்றாலும் இது

விஷயங்களை ரூபிக்கவேண்டிய கடமை அவர்களுக்கிருந்து வருவதை மறுக்க எவராலும் முடியாது துண்டுப்பிரசுரங்களிலும் தபால் கடிதங்களிலும் முகாதாவிலும் பேருரைக்குறித்து இன்னுரைத்தான் நாங்கள் காபிருக்கி இருக்கிறோமென்று பல்லாயிரக்கணக்கான ஜனங்களிடத்தில் பேசியிருப்பதால் தமீம்சா முர்தத்தாகவும் முல்ஹிதாவும் ஜிந்தீகாகவும் முனாபிகாகவும் காபிராகவுமிருக்குமென்று ஏன் சொல்லக்கூடாது இன்னம் நான் பத்வாவில் பேரைக்குறிக்கவில்லை சுவாலுக்கு ஜவாபு எழுதினேன் அது சரி சரியல்லவென்று பார்க்கவேண்டியதும் அதிலுள்ள ஆட்சேபனைகளுக்கு மட்டிலும் ஜவாபுக்கு கடமைப்படுவேனென்று பேடித்தனமாய் எழுதிவிட்டு மஜ்லிசுல் உலமாவுக்கு வராமல் ஒளிந்துகொண்டாரென்பது உலகறிந்தவிஷயம் இருந்தாலுமிருக்கட்டுமென்று சுவாலுக்கு ஜவாபு சரியல்லவென்பதையும் அவைகள் பாத்திலாகவும் மர்தூதாகவுமிருக்குமென்பதையும் இமாம்களின் கிதாபுகளுடைய ஆதாரங்களைக்கொண்டே எழுதப்பட்டது இந்த துவாம் பரமான பயானுக்குப்பின் தெளிவான கல்பும் சரியான (விளப்பமும்) பருவமான புத்தியுமுடையோர்களுக்கு இதில் யாதொரு சந்தேகமுமுண்டாகாது.

(திருக்குர்ஆன்) இந்த கிதாபில்யாதொரு சந்தேகமுமில்லை இதாகிறது முத்தகீன்களுக்கு நேர்வழியாயிருக்கும்.

## உணர்ச்சி.

அறிந்துகொள் திட்டமாக இல்மென[illegible] ஹக்கு தஆலா உடைய நூருகளில் நின்றும் ஒரு நூராயிருக்கும் தெண்டிப்பைக்கொண்டோ, படிக்கிறது கொண்டோ அல்லது இல்ஹாமைக்கொண்டோ அல்லாஹுத்தஆலா தவ்பீக் செய்தவர்களுக்கு அந்த நூர் கிடைக்கும் இன்னம் லுஹ்ருல் ஹகாயிக் என்ற கிதாபில் எழுதியிருக்கிறதென்னவெனில் ஷரீஅத்துடைய இல்மாகிறது படிப்பதைக்கொண்டும் படிப்பதன்றியே ஆண்டவனில் நின்றும் நன்குடையதாயும் இல்ஹாம்மூலமாயும் (மூடலாகவோ விபரமாகவோ) அந்த இல்மு உண்டாகுமென்றும் உம்மியாயிருந்த ஷைகுஸயீது றஹ்மதுல்லா அவர்கள் ஒரு மதரசாவிலும் ஒரு ஒஸ்தாத்திடமும் போய் ஓதாமலே அவர்கள் மார்க்கவிஷயமான கல்விகளை அறிந்திருந்தார்

களென்றும் அதைப்போலவே அஹ்மதுஸ்ஸையாது, ஷைகு அலி
ய்யுல் அஹ்தல், ஷைகுஅபில்முகீது, றஹிமஹு ெமுல்லா முதலிய
வர்களுமறிந்திருந்தார்களென்றும் இன்னுமிவர்களைப் போன்ற
மகான்களும் பஷாயிகுகளில் நின்றும ஒரு பெரும் கூட்டமா
கிய அனேக தாதாக்களும் உம்மியாக யிருந்து மார்க்கமஸ் அலா
க்களை அவர்கள் அறிந்திருந்தார்களென்றும் அல்லாகுத் தஆலா
படிக்காதவர்களை ஒலியாக ஆக்குவானேயானல் அவர்களுக்கு
தானே படித்துக் கொடுக்கிறுனென்று நாயகம் சொல்லிய
ஹதீதை ஆதாரமாய்க்காட்டிமார்க்க இல்முகளை மனிதர்களிடத்
தில் படிக்காமலே நன்றுடை இல்ஹாம் புறத்தில் அறிந்துகொள்
வார்களென்றும் மேற்கூறிய கிதாபில் வருவதுமன்றி (ஷற்இய்ய
த்தான) மார்க்கசம்மந்தமான கருமங்களையும் உலக விஷயமான
கருமங்களையும் கஷ்பைக்கொண்டு அறிவதுண்டென்றும், அறி
வது அவசியமில்லாதிருக்கும் உலக விஷயங்களையே கஷ்பைக்
கொண்டறிவார்கள், அறியவேண்டிய அவசியமும் அறியாவிட்
டால் தீனில் தங்கடமும் ஏற்படக்கூடிய ஷறஹின் இல்மை எப்
படி அறியமாட்டார்களென்றும் துஹ்பதுல் அஆலியில் வருகிறது
ஆனபோதே தானைக்கொண்டும், மனிதரிடத்தில் அரபி, பார்ஸி,
உர்து, இவைகளைக்கொண்டும்தான் மார்க்கவிஷயம் தெரியவே
ண்டுமென்று இந்த மூன்று பாஷையல்லாத்ததைக் கொண்டோ
கஷ்பைக்கொண்டோ ஒருவர் தெரிந்தாலவரை தெரியாதவரென்
றும் படிப்பில்லாதவரென்றும் எப்படிச்சொல்லலாம் இவ்விதம்
சொல்வது மூடத்தனமும் மனமுரண்டுமாயிருக்கு மென்பதில்
ஐயமில்லை ஆகையால் ஒருவரிடத்திலும் படிக்காதவராயும் ஒரு
விர்அமலும் செய்யாமலுமிருப்பவரை ஆண்டவனுடினல் ஒலி
யாக ஆக்கி தானே படித்துக்கொடுப்பான்.

(திருகுர்ஆன்) இவ்விதம் செய்வது அவனுடைய கிருபை
அவன் நாடிய பேர்களுக்கு இவ்விதம் செய்வான் அவன் வலுப்
பமான வரிசையை உடையவன்

ஆனபோதே இல்மைக் கொண்டு மூக்கிய கருத்தாவது
ஆண்டவனை அறிந்து வணங்குவதேயாம் சிலர் இல்மைப் படித்
திருந்தும் அதின்படி நடக்காத காரணத்தால் ஷைத்தான்
அவர்களை மிகைத்து விடுகிறுன் அதைக்கொண்டு பொருளை

மிருதமாய் சம்பாதிப்பதிலும் தலைமைதனத்தைக் கொண்டு ஒருவருக்கொருவர் பெருமை பாராட்டிக்கொள்வதற்கும் தன்னைத் துயர்ந்தோர்கள் மிருதமாவதைக்கொண்டு மதிப்பு மரியாதை தேடுவதற்கும் அந்த இல்மை இதற்கு காரண மாகவும் ஆயுதமாகவு மாக்கிக்கொண்டார்கள் இவ்விதமான ஆயுதங்களைகொண்டு துன்யாஉடைய ஹாஜத்துகளை நிறைவே ற்றிக்கொள்ள ஆதரவுவைத்து எவ்விடத்திற்குபோனால் துன்யா உடைய ஹாஜத்து நிறைவேறுமோ அந்த இடத்திற்கெல் லாம் சென்றுச் சென்று உடையாலும் வார்த்தையாலும் உல மாக்களின் வேஷம் பூண்டுகொண்டு துன்யாவின்பேரில் செத்தவிடக்கைக்கண்ட நாய் எவ்விதம் பாயுமோ அவ்வி தம் ஹவாகொண்டும் மற்றதுகளைக்கண்டால் எவ்வாறு குரைக் கிறதோ அவ்விதம் பிறருடைய அய்பைபேசிக்கொண்டும் தான் செய்யாத அமல்களைபிறருக்குஏவுகிறது ஆண்டவனிடத்தில் பெ ரும் பாவமாயிருக்குமென்று குர்ஆனில் வந்திருப்பதை மறந்து ஏவிக்கொண்டும் தன்னைத்தானே பெரிய இல்மாளி என்றும் எண் ணிக்கொண்டிருப்பதால் தவ்பாச்செய்யமாட்டார்கள் இவர்கள் அல்லாகுத்தஆலாவிடத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டவர்களாய்விடு வார்களா இன்னும் நாயகம் சல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஒரு நாள் சஹாபாக்களைநோக்கிச் நான் தஜ்ஜாலைப்பற்றி பயப்படவி ல்லை தஜ்ஜாலல்லாதவர்களைப்பற்றிஉங்கள்பேரில்நான்மிகவும்பய ப்படுகிறேன் என்று சொன்னதும் சஹாபாக்கள்யாரசூலல்லா அவர்கள் யாரென்றுகேட்டதற்கு துன்யாஉடைய ஆசையுள்ள உலமாக்களாயிருக்குமென்று நாயகமவர்கள் சொன்னார்களே அப்பேர்கொற்ற ஆலிமானவர் தாங்கள் செய்தவைகளுக்கெல்லாம் தவ்பாசெய்யவேணுமென்ற உணர்ச்சியின்றிமிரண்டுகிடக்கும்படி யான மதியீனர்களைச் சேர்ந்தவர்களான இருக்கும் துன்யாவை மூஹப்பததுவைத்த உலமாக்களை தஜ்ஜாலைவிட அதிகபயப்படுகி றேனென்று நாயகம்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் சொன்னத ற்கு காரணமாவது தஜ்ஜாலின் கடைசிகருத்தாவது மூஸ்லிமை காபிருக்குவதும் வழிகெடுப்பதுமா இருக்கும் இவ்விதமாகவே துன்யாஉடைய ஆலிம்களின் காரியமும்ஆதலால்அவர்கள்ஈவினு ல்வஸ்ஹுநசீகத்தைக்கொண்டு துன்யாவை விட்டும் வெருக்கும்படி ஜனங்களுக்கு சொன்னாலும் செயலைக்கொண்டும்ஹாலகளைக்கொ

ண்டும் துன்யா அளவில் அழைக்கிறவர்களாக விருக்கும் ஏனென்றால் மனிதருடைய சுபாவமாகிறது சொற்கள்குணபாடு செய்வதைக்காண செயல்கள் சீக்கிரம் குணபாடுசெய்யுமென்றும் ஹாலுடைய (செயலுடைய) நாவாகிறது சொல்லுடைய நாவைக் காண மிருந்த குணபாட்டை உடையதாக விருப்பதால் இந்த (மக்ளூர்கள்) மிரண்ட ஆலிம்களுடைய சொல்லைக்கொண்டு திருந்தினவர்களைப்பார்க்கிலும் செயலைப்பார்த்துக் கெட்டுப்போனவர்கள் மிகுதமாயிருக்கும் ஏனென்றால் உலமாக்கள் துனியாவை தேடுவதிலும் மற்ற கெட்டவிஷயங்களைச் செய்வதிலும் துணிபுகொள்வதால்தான் தெரியாதவர்களும் இவர்களின் கெட்டசெயலை பார்த்து தாங்களும் அவ்விதஞ்செய்ய ஆரம்பஞ்செய்கிறார்கள் இப்பொழுது இப்பேர்ப்பட்டவர்களின் செயலைக்கொண்டு இல்மாகிறது அல்லாஹ்வுடைய அடியார்களை பாவமளவில் இழுத்[illegible]டுவதற்கு காரணமாய் இருக்கிறது இவர்கள் இவ்வாறிருந்து கொண்டு தாங்கள் அல்லாவுடைய அடியார்களைவிட மேலென்றெண்ணி இறக்கையுள்ளளவும் பைப்பேல்ஹலாக்கடைவது அவர்களுக்கே தெரியாதவண்ணம் அவர்களுக்குள் நிறைந்திருக்கும் துனியாவின் மஸ்த்தானது ஹகீகதின் கண்ணை மூடிவிட்டது.

(திருக்குர்ஆன்) தீங்கான கருமங்களைச் செய்துகொண்டு தாங்கள் நலவைச் செய்கிறோமென்றெண்ணிக்கொண்டவர்கள் இவ்வுலகத்திலேயே அவர்கள்செய்த அமல்களெல்லாம் கெட்டுப்போய்விட்ட நஷ்ட்வாளிகளென்று திட்டமாக நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.

கஷ்புன்னி[illegible]சாபும் பெருமையுடையோரும் ஓதுங்கும் தலம் கெட்டதாயிருப்பதால் அதை சரி என்று ஒப்புக்கொண்டுபடித்து பார்க்கிறதைப்பற்றி அச்சம் மூட்டுகிறேன் அதனால் குபிர்விஷயமாகுவதை [illegible]யந்துகொள்ளுங்கள் அதின் முகத்தில் மண்ணை போட்டு அடக்கம் செய்துவிடுங்கள்.

(திருகுர்ஆன்) ஆண்டவனே எங்களுக்கும் பாசிக்கான கூட்டங்களுக்கு மிடையில் பிரிவினைசெய்து அவர்களின் தீங்கை விட்டும் எங்களைக் காத்தருள் அவர்களுக்கிடையில் ஹக்கைக்கொண்டு தீர்மானஞ்செய்யப்பட்டது எல்லாப்புகழும் புகட்சியும் படைப்புகளடங்கலுக்குடைய ஆண்டவனுக்காக விருக்கும் என்று சொல்லப்பட்டது இதைகபூல் செய்தருள்.

றம்யுத்து ரூயின் தற்ஜமா

முதர்ப்பாகம்.

முற்றிற்று.

# அனுபந்தம்.

மூமினாகிய சகோதரர்களுக்குத் தெரிவிப்பது யாதெனில், ஸுவாலில் சொல்லப்பட்டவர், நான் திட்டமாக மவ்ஊதான ஈஸாநபீ (அலை) மா இருக்குமென்றுவது, நான் றப்புல் ஆலமீனா இருக்குமென்றுவது நான் எல்லாவித நைபுகளையும் எல்லாரகசியங்களையும் அறிவேனென்றுவது, குர்ஆன் நாற்பதுஜுஸ்உ அதில் பத்து ஜுஸ்உ என்னிடத்திலிருக்கிறதென்றுவது, எந்தக்காலத்திலும் எந்தக்கடிதத்திலும் யாருக்காவது எழுதியதே கிடையாதென்பதும், அந்தப்படி எந்தஇடத்திலும் யாரிடத்திலும்சொன்னதும் கிடையாதென்பதும் திட்டமாயறிந்திருந்த படியாலும், இந்த விதமாகசுமார்(12) வருஷத்துக்கு முன் ஒருமனிதனுக்கு எழுதிய கடிதத்தில், எழுதி இருக்கிறதாகபொய்கட்டுக்கட்டிவீண்புகாற்செய்தவர்தனைமுன்னிட்டு அந்த கடிதத்தின நகலை பார்த்ததிலும் தீர்க்கவிசாரித்ததிலும் இதுபொய்யென்று திட்டவெட்டமாய் தெரிந்து அவர்களின் பொய்கட்டையும் திருட்டுத் தனத்தையும் எல்லோரும் அறியவேணுமென்று அந்தகடிதத்தின் போட்டோவை கேட்டதற்கு நாளது வரையிலுமதை வெளிப்படுத்தாமல் இந்த குலசேகரம் பட்டணத்து தமீம் சாகிபும் புதிய இஸ்லாமான ஒரு மௌலவும் (4-5) வருஷக்காலமாக பொறுமை மேலிட்டதினால் இல்லாத வார்த்தைகளை ஏற்படுத்துவதும் பொய்சாக்ஷிகளை தயாரிக்கிறதும் அந்த போக்கிரிகளுக்கு இவைகளை கற்றுக்கொடுக்கிறதும் ஒருவருக்கொருவர் எழுதும் தபால்கடிதங்களை திருட்டுத்தனமாய் எடுத்துக்கொள்வதும் அதை தூக்கிகொண்டு ஊர் ஊராய் அலைவதும் பலஊஷாட்டங்களை ஜனங்களுக்கு போதிக்கிறதும் இரவு பகலாய் ஒவ்வொருவரின் காலையும் கையையும் பிடித்து கெஞ்சி அழுது தன்கக்ஷிக்கி ஆள்சேர்ப்பதும் தீனுக்காக பாடுபடுகிறோமென்று வெளியில் சொல்லி உதவிக்காக அவர்களை யேமாத்தி பொருளுதவிதேடுவதும் வந்தவரையிலும்வாங்கிவருவது இவ்விதமெல்லாம் செய்துகொண்டு வருவதில் அவர்களின் முடிவான கருத்து என்னவென்று கவனிக்கில் துன்யாவின் பிளைபுக்காக வேண்டி எப்படியும் ஒருமுஸ்லிமை காபிராக்கிவிட வேணுமென்று முயர்ச்சி செய்து வருவதானது ஆதிப் பகையனாகிய இப்லீஸும் கடைசிகாலத்தின் விரோதியாகிய தஜ்ஜாலின் முழுக் கருத்தையும் முயர்ச்சியையும் போலிருக்குமென்பது வெட்டவெளிச்சம்

இம்மகாபெரிய இரண்டு ஆதிக்காபிர்களான தீன் விரோதிகளின் கொளுகையையும் குணத்தையும் கோரிக்கையையும் எடுத்து நடதித் வருகின்ற ரிபாகிய்யாவான இவ்விரண்டு விந்தைகையும் சும்மாவிடலாமா அவர்களை துண்டித்துக் கண்டித்துத் தெண்டித்து சரியான புத்திவருத்தி வைப்பது ஒவ்வொரு வுலமாக்கள் மூமீனானவர்கள் அனைவர்பேரிலுமிருந்த கடமையை நிறவேற்றும் பொருட்டு மகிமைதங்கிய மகாபெரிய மஜ்லிஸுல் உலமா ஸபையார் அக்கட்டுகளை கொண்டு வரும்படி அழைத்தற்கு வார



மல் அவர்களையே தூஷித்து விளம்பரம் செய்ததும் அந்த கடிதங்களின் போட்டோ எடுத்து டயிரக்கப்படுத்தாமலிருப்பதும் மேலெழுதியபடி அக் கடிதங்களில் அப்படி எழுதப்படவில்லை என்பதற்கும் இவர்கள் பொய் கட்டுதான் கட்டி இருக்குறார்களென்பதற்கும் போதிய அத்தாட்சியா இருக்கும் இதைநன்குணராதசிலபாமர ஜனங்கள் அவ்விருவர்களும்கற்றுக்கொடு தத்வஸ்வாவென்னும் கோட்பாடுகளை வானத்திலிருந்து இறங்கியவஹ்யைப்போல் மனதில் எண்ணிக்கொண்டு இதுவிஷயத்தில் அவர்களுக்கு உதவியாயிருந்து வருவதும் பொருளுதவி செய்து வருவது மானது தீனை இடிக்கமுயர்ச்சி செய்த பெரும்பாபிகளான இப்லீஸ், தஜ்ஜால் இவர்களின் தூதர்களான வம்பர்களுக்கு வுதவிசெய்தது போலாகுமென்பதில் சற்றேனும் சந்தேகமில்லை.

இவ்விரண்டு பின்திருகளின் கெட்டகருத்தை நன்குணராத (2—3) மூஸாக்கள் அவருடன் சேர்ந்துக்கொண்டு முஸ்லிமைகாபிருக்க முயர்ச்சைசெய்துவருவதானது விஷனிக்கதக்கதே அதிலும் உலமாககள் வாய்மூடி சும்மா இருப்பது விந்தை யினும் விந்தை எப்படியவது தீனைவிர்த்தி செய்யவேணுமென்பது எல்லாநபிமார்கள் சஹாபாக்கள் தீனுடைய உலமாக்கள் முதலியவர்களின் குணமென்பது வெட்டவெளிச்சமாஇருப்பதனாலும் இட்டுக்கட்டிய ஸுவால்களுக்கு மனமுரண்டைக் கொண்டும், கை லஞ்சம் வாங்கிக் கொண்டும் எழுதிய சஷப்புன்னிகாபு என்ற புத்தகம்ஷர் ஹுக்கு விரோதமாகவும், அதைச் சரிஎன்று நம்பியவர்கள் காபிருகிவிடக் கூடியதாகவுமிருப்பதை கவனிக்கில் அதை றத்துச்செய்வது பற்லுகுைக இருப்பதினாலும் பத்வாஎழுதியவரும் அதை நம்பி அவர்களுக்குவுதவியா இருந்தவர்களும் தௌபாச்செய்து மீளும் பொருட்டுகோட்டார்.ஜ்னுப் மௌலானா மௌலவீ அப்துல்கனிய்யி ஆலிம் சாகிபவர்களால் அறபியில் றத்துஎழுதி மாட்சிமை தங்கியமகான்களான இமாம்களின் முஃதபரான கிதாபுகளுடை ஆதாரங்களுடனும் சுமார் (100) வுலமாக்களுடையகைஎழுத்தும் முகறுகளும் வைக்கப்பட்டு எழுதிஇருப்பதை இன்ஸாபானகண்ணைக் கொண்டுபார்த்துவிளங்கிவழிகேடர்களின் வழிகேட்டைவிட்டு மீண்டு இஸ்லாமென்னும் ஜோதி சமுத்திர த்தில் நிற்க்கும்படியான ஷரீஅத் தென்னும் கப்பலிலேரி தரீகத்தென்னும் அமலைச் செய்து ஹகீகத்தென்னும் குறிப்பைநோக்கி, ஹிதாயத்தென்னும் மஃரிபத்தை அடைவீர்களென்பதை இதுமூலமாய் எச்சரிக்கைச் செய்கிறேன் அறபிதெரியாதவர்களுக்காக ஸுத்தத்தமிழில் அதைவிரித்துரை செய்திருப்பதைப்பார்ப்பவர்களுக்கு ஆகிரத்தின் பலனையும் ஈமானின்பலனையும் கொடுக்குமென்பதில் சந்தேகமில்லை ஆண்டவன் இருலோகத்திலும் அனைவர்களுக்கும் அருள்புரிவானாக ஆமீன்.

